No 17



# தஞ்சைமாநகர ஸ்தலபுராணம்.

தஞ்சைக் கருந்திட்டாங்குடி ம[illegible]யம்மன் கோவில்
மடவளாகத்தில் வசிக்கும் மகா-ள-ள-ஸ்ரீ

கோவிந்த சாஸ்திரியவர்கள்

குமாரர்

கீர்வாண ராமாயண பிரசங்க வித்வான்

வேங்கடராம சாஸ்திரியவர்களால்

வடமொழியிலுள்ள

பவுஷ்யோத்ர பிர்ம்மாண்ட புராணங்களிலிருந்து

மொழிபெயர்க்கப்பட்டு

---

மற்படியூர்—தெற்கலங்கம்

க்ருஷ்ணசாமிநாயக்கரவர்கள்

குமாரர்

சுதேவநாயக்கரவர்களால்

---


தஞ்சை

"பூர்ணசந்திரோதய அச்சுக்கூடத்தில்"

பதிப்பிக்கப்பட்டது.

1893.

# விளம்பரம்.

---

இப்புத்தகம் வேண்டுபவர்கள் தஞ்சைக் கருந்திட்டான் ஸ்ரீநாட்சியம்மன்கோவில் ம[illegible]வளாகத்தில் வஸிக்கும் மகா-ள-ள-ஸ்ரீ. வேங்கடராம சாஸ்திரியவர்களிடத்திலும் தை வி[illegible] அருணை[illegible]க்கலங்கம் மகா-ள-ள-ஸ்ரீ கிருஷ்ணசாமி நாயக்கர்கள் [illegible]நகைக்கடையிலும் இறையத்தி[illegible]ப் பெற்றுக் கொ[illegible]

தணியபெருந்தாமே முழுதுறப்பிறப்பின் றளிரிறப்பிலையுதிர வெனாரு
னினைபபருந்தம்பாற சேறலின்றேனு ரெஞ்சிடிக்திருகுவதென்றோ
சுனைப்பெருங்கலங்கற் பொய்கையஞ்சூழ்சீர்ச் சூழன்மாளிகைசுடர்வீசு
மெனைப்பெருமணஞ்செ யிஞ்சிசூழ்தஞ்சை யிராசராசேச்சரத்திவர்க்கே

பன்னெடுங்கால்ம் பணிசெய்துபழையர் தாமபலமா[illegible]ருசு
வென்னெடுங்கோயி னெஞ்சுவீறறிருந்த வெளிமையை [illegible]

மின்னெடும்புருவத திளமயிலனையார் விலங்க [illegible]
யின்னடம்பயிலு மிஞ்சிசூழ்தஞ்சை யிராசராசேச்சரத்திவர்க்கே

மங்குல்சூழ்போதி னொழிவறநிறைந்து வஞ்சகர்நெஞ்சகத்தென
[illegible]ங்கழற்சுடரா மவர்க்கிளவேன லலர்கதிர[illegible]
பொங்கெழிறறிருநீ றழிபொ[illegible]சிவனபிற புன[illegible]ர்சடை
ரங்களுக்கினிய ரிஞ்சிசூழ்தஞ்சை யிராசராசேச்சரத்திவர்க்கே

தனியவொத்தனையோ ராயிரவரு[illegible] உனட[illegible] பொ[illegible]யுத்தனைரா
கனியாததருதீங் கருமபாவெண்புரிநூற கட்டியரட்டவாரமிர்த
புனிதர்பொற்கழலர் புரிசடாமகுடர் புண்ணியர்பொயயிலாமெய
யினிடொத்தனையு மிஞ்சிசூழ்தஞ்சை யிராசராசேச்சரத்திவர்க்கே.

சரளமந்தார சண்பகவகுள சந்தனநந்தனவனத்தி
னிருள்விரிமொழுபபி னிஞ்சிசூழதஞ்சை யிராசராசேச்சரத்திவ
பருமருந்தருந்தி யலலறிகருணு ரறைந்தசொன்மாலையிைாந்தி
பொருண்மருந்துடையோர சிவபதமெனனும் பொனனெடுங்

உ

சிவமயம்.

# சிறப்புக்கவி.

தஞ்சாவூர்ச் சதாவதானம்

மகா-ா-ா-ஸ்ரீ

## சுப்பிரமணிய ஐயரவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

பூமருவும் புண்டரிகப் போதுறையும் புத்தேள்பாற்
பூத்தபூவில்
மாமருவுந் தஞ்சபுரி மான்மியத்தை வடமொழியின்
மன்னியுள்ள
பாமருவும் பவுடியத்தும் பிரமாண்ட புராணத்தும்
பரிந்தாராய்ந்து
தேமருவுந் தென்மொழியி லெளிதினில்யா வருமுணரச்
செய்வா ரென்னை. (௧)

அன்னகர வாசியலங் கத்தென்றும் வாசமல
ரரவிந் தத்துப்
பொன்னருள்சோ திலகுகிருட் டிணசாமி நாயகன்முன்
புரிதவத்தால்
இன்னிலத்துக் கற்பகமா யுதித்துநல மனைத்தினுக்கு
மில்லா யுள்ளான்
தன்னிகரும் புகழ்வாசு தேவநா யகசீமான்
சாற்றக் கேட்டு. (௨)

கருந்திட்டங் குடிக்கயற்கண் டாய்கோயின் மடவளா
கத்து நாளும்
இருந்திட்டங் கும்புகழ்செய் கோவிந்த சாத்திரமா
னீன்ற மைந்தன்

வாருந்திட்டங் குறையாது கவிபொழிவேங் கடராம
மறைவல் லாசான்
அருந்திட்டங் குவலயத்தோர் பெறவசன மாப்புனைந்திங்
கச்சிட் டானே. (ரு)

---

தீபநகர் அம்மாபேட்டை இலக்கணவித்துவான்

மகா-ா-ா-ஸ்ரீ

## சி. கண்ணுசாமிபிள்ளையவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஓதரிய வேதமுமென் னெண்கலையு முணர்ந்தபிரா
னெளிர்த வத்துச்
சூதமுனி முனர்ச்சொன்ன காதியர்க்காய் வடமொழியிற்
றுலங்கச் செய்த
பேதமறும் பிரமாண்டம் பவிடோத்த ரம்மெனப்பேர்
பெற்ற நூலிற்
றிகழும் தஞ்சபுரி மான்மியத்தை யாராய்ந்து
தென்மொழிப்பால் (க)

அருமறையின் குலத்துதித்தான் மாலைமாற் றணியுறுபே
ரணவு மண்ணல்
உரிமைபெற வாண்டதஞ்சைக் கருந்திட்டான் குடியதனி
லுற்றான் கற்றான்
பெருமையுறுங் கோவிந்த சாத்திரிமுன் செய்தவத்திற்
பெற்றான் கீத
மருவுபல சாத்திரத்தான் வெங்கடரா மப்பெயரான்
வனைந்தா னீதை (உ)

எண்சீர்க்கழில்.

பொன்பூத்த தஞ்சைநகர்த் தக்க ணத்துப்
பொலங்குலவு மலங்கமுவான் புகழ்ச்சி யுள்ளான்
மின்பூத்த கிருட்டினசுஞ் சாமி யென்போன்
செய்தவத்தி லுதித்தசுதன் சாச தேவன்

நண்பூத்த நாயகனு ரன்பிற் பூர்ணச
சந்திரோ தயமெனப்பேர் தழைத்த வச்சின்
மின்பூத்த வழகொழுகப் பதிப்பித் தன்றான்
மேன்மைதனைப் புவியறிய விளக்கி னானே. (௩)

---

ஷை அம்மாபேட்டையில் வசிக்கும்
மகா-ா-ா-ஸ்ரீ
அரிஹரபுத்திரசெட்டியாரவர்கள் குமாரர்
## முத்துகுமரசெட்டியாரவர்களியற்றிய
கலிநிலைத்துறை.

மண்ணிவப்புறுந் தளிபல வகுத்தியாழ் மருவும்
பண்ணிவப்புறு மொழிகிளர் பாகனைப் பரவா
விண்ணிவப்புறு நேரிறை நாட்டின்மா விளக்க
நண்ணிவப்புறும் புரிசைசூழ் தஞ்சைமா நகரம் (௧)

சேடுதாங்குமன் னகர்ப்புகழ் மறைப்பொரு டெரிந்த
வீடுதாங்குநற் புலத்தியன் சூதனுக் கியம்ப
மாடுதாங்குமெண் சௌனகா தியர்க்கவன் வழங்கப்
பீடுதாங்குமா ரியந்தனைத் தமிழ்ச்சொலாற் பெயர்த்து (௨)

புலங்கி ளர்ந்தநான் மறையினோ டாகமம் பொலியுந்
துலங்கி ளர்ந்தசெஞ் சடைமதிப் பரனைபுட் கொள்ளாப
லங்கி ளர்ந்தபண் ணிசையொடும் புணர்வுறப் பாடு
நலங்கி ளர்ந்தவோர் வேங்கட ராமநா வலவன் (௩)

விருப்பமிக்கநல் வசனமா யணிபெற விரித்துக்
கருப்பமிக்கசங் கருணை நுகர்ந்தவன் களிப்ப
வுருப்பமிக்கவன் பொடுதருங் குறத்தியை யுகந்த
வருப்பமிக்கவல் லவுணர்க்காய்ந் தவன்மகிழ்ந் தருள. (௪)

பன்னகாதிபன் வியப்புறப் பொருட்சுவை பகரும்
நன்னர்மேவச்செய் தனனழ கெனவதை நகுமத்
தன்னபூரண சந்திரோ தயமெனு மச்சிற்
றன்னவேகடைந் தளித்தன னெவர்களு முவப்ப (௫

வாய்மைமகளைப் பொறிபுணர் மருத்துமாய் முகுந்தன்
நாமமேவிய பத்திமை நியமமுந் தகையார்
சேமமேவிய கிருட்டின சாமிநா யகன்செய்
நேமமேவிய தவத்தில்வந் துதித்தமா நிபுணன் (௬)

விராயந்நசித வொளிமணித் திரள்விளங் கியபொன்
காசுமுன்னதாம் பொருளுளான் றெருளுளான் கனவான்
தேசுமல்கிய கருணையிற் சிறந்தநற் கொடையான்
வாசநேசவன்மங் கையர்மட லெழுதுவண் மையனே. (௭)

---

மதுரை அம்மாபேட்டையில் வசிக்கும் ஸௌராஷ்டிர

மகா-ா-ா-ஸ்ரீ

## கொண்டா. ரா. கிருஷ்ணய்யரவர்களியற்றிய

### நேரிசையாசிரியப்பா.

மணிதிகழ் சூட்டுத் திணியுடற் பசுந்தலைத்
துளைமுள் ளெயிற்று விளைநஞ் சுமிழு
மழுகாற் றெறுகட் டுறுமிரு சகத்திர
நாவரி பொருக்குங் கோவரி யம்பர
வளக்கமா விடபி வளக்கரி யவனூர்
நாருவித் திரியொடு பரவிய வெவணு
முறைவரெஞ் ஞான்றுங் குறைவி றிருவுற்
றோங்குபு வளவிற் பாங்குறு முன்றாற்
கடூர னொன்றுந் தடமலி கவத்தாற்
புரங்கவர்க் கூறின் வரங்குல விரச
முண்டுவிண் பொழின்மரூஉம் விண்டுபெய் துளியென
வெணற்கரும் பனுவல் வணக்கமு வியப்புற
நிகமா வியற்றிய வாதரா யணமுனி
சூதபு ராணிகற் காதர மனனு
விரித்தபு ராணம் பரித்திரி யாருண்
மாண்டிக மூம்பிர மாண்டபு ராணங்
குருப்பவ டிகமாத் திருப்புரா ணத்தும்

விளங்குறு சமிவனக் களங்கமிற நலமாந
கருநை யம்பதி மருத மாளுமியக்
கீர்வா ணப்பொருள் சீர்வா கிலகு
மககரு சொற்பொருள் சொக்கழ ராப்பணி
யிலக்கணம் புணர்வுறு நூலக்கநற றமிழ்த்தென
வசன ரூபம தாகவ ளாநதான்
நிசபதம் படிப்பார் நெய்தையா யடையவும
நேத்திர மிமையார் தோத்திரம் பயிலவும
வாணியம மகமன் மருஉங்களி யெய்தவும்
வாணிறப் பகனோர் மகிப்பிர காசு
யாப்பிய லுணர்ந்த பூபுல வோர்குழா
மாதி யாவரு மொதியி னுறனைப்
பொருவவே றுளவோ திருவகி லத்தெனுக
கொணடா டிடவு மண்டா ரமர்ந்த
திருயகட் குறையுளாத் திகழுமத் தலதது
பெருமைக் கரந்தை யிருமைக கயறகண
ணம்மை யமர்ந்த செமமணி யொளிர்தரு
வான்றளி மேய வடமட வளாகங்
கான்றுமா மணிசெய் கனக மாடஙகளு
பொன்னிருக் தாக்க மன்னிடு மறுகில்
வாழுமோா பிரம வருணாகன் னெறியான்
ம்பழுறு மகருசெய் பெருநதகை யாளன்
கோவிநதப பெயர் முனிவன் குயிற்றிய
மாவுவ்வுதனுன் மணிமணி கொழிகருங்
தரஙக வருணவ வரஙகிள ருலகி
னறமெலாந திரண்டோ ரணியுலா முருவாய்த
திறலுட னுதித்த செல்வனன் புடையோன்
மராமர வென்றோன் வருத்தரா மாயணம
புராதன வனுமன புதன்றரா மாயணம
வலஙகிளா சொலலார் வசிட்டரா மாயணம
நலஙகிளர் யோக நாதரா மாயணம
சிரநதகை யிலகும் பரநதுரா மாயணம

சதிர மல்குவி சித்ரகா மாயணம்
யாதவ ராகவ பாண்டவி யம்பெரும்
கோதகை யேடாக் கோடெழுத் தாணியா
முக்கட் டந்தி முன்னர் வனாந்த
சொக்கமர் டாரதந் தொல்பா கவத
மருமறை முடியான் றிருவிளை யாடல்
கருவினை யகற்றுந் திருவுடைக் காந்தங்
குருவளரின்னுங் குயிறுநா லனைத்துந்
தேர்ந்துமன் னவையிற் றெரித்திடு நாவலன்
சார்ந்தவ ருறுவ றனையொழித் திடுவோன்
திரமிடந் தெலுங்கு தேவ நாகரம்
வரமுடைக் கன்னடம் மன்கீர் வாணம்
கீதசங் கீத சோதிட நிபுணன்
அலங்குப வீத மடுக்கிதழ்க் கமலந்
துலங்குருத் ராக்கந் தூய்மலி வெண்ணீ
றிலங்கிய வாக விறையவி யேற்கும்
பொலந்திகழ் முத்தீ வளர்த்திடும புண்ணியன்
பண்ணியன் மொழியாள் பாகன் சரண
நண்ணியெப் பொழுது நற்றவம் புரியும்
வேங்கடராம மெய்ப்பெயர் பூண்ட
வோங்குபூ சுரனவ் வுயர்ச்சிமான் மியமா
மதிகவி னிமை யமுறைதயங் கருநைசப
பதியிற் றக்கணை வகழ்ப்பரி மறுகி
னுறையுநோக் கலங்கு முயாதினை மலையும்
பொறையுடைக் கிருட்டின சாமிப் புனிதன
றலத்தனில் வந்த தருமவா னலஞ்சேர்
சிவந்தரு மாலைச சிந்தை யிருத்துவா
னிருநிதிக் கிழவனே ரிசைமருவும் பொருளான்
றருநிதிக் கணனொரு சகத்ரனைப் புரையு
மபரிகண் மெச்சு வியனமர் சீரான்
வாளிரு விழியார் மடல்வரை யழகன்
ஏற்பவ ரடுத்துக் கேட்பதி லென்னுள்

சிவமயம்.

இன்னூலாசிரியர் செய்த ஸமஸ்க்ருதவசனம்.

॥ श्री ॥

भविष्योत्तर ब्रह्मांड पुराणे उत्तरखंडे क्षेत्र प्रशंसायां तंजपुरी महात्म्यं शमिवन प्रकरणंच, तंजपुरि वासिना गो० वेंकटरामार्येण भक्त जनानां अत्यंत उपकाराय मध्यार्जुन श्रीनिवासाचार्यैः सम्यक् परिशोध्य श्रीतंज पूर पूर्णचंद्रोदय मुद्राक्षर शालायां द्राविड भाषा वचनरूपेण मुद्रापितं विजयतेतराम् ॥

தஞ்சாவூர்

மகா-ா-ா-ஸ்ரீ ராஜராஜப்பிரபுடக ஶிரோன்மணியாகிய

சத்ரபதி சரபோஜி சிவாஜிமஹாராஜா அரண்மனை மஹாவித்வான்

வேதசாஸ்திரசம்பன்ன

வாசுதேவரங்கநாதகவி அம்பேகரவர்களால்

இயற்றப்பட்டது.

श्रीतंजापुःसमेतां शुभकर-सुशमी-काननीय-प्रशंसां ।

गोप्त्रीं तां द्राविडीयैः सुमधुर वचनैः पूर्णचंद्रोदयेऽस्मिन् ॥

विंदंतीं सर्व सिध्धीः सकल जन हिते मुद्रयामास शैवीं ।

दक्षो गोविंद सुनूः शिवभजन रतो वेंकटाख्योहिरामः ॥

தீபங்கா அம்மாபேட்டைக்கடுத்த

உக்கடையில் வசிக்கும்

மகா-ா-ா-ஸ்ரீ

சுப்பராயஜோஸ்யரவர்களால்

இயற்றப்பட்டது.

श्रीमत्तंजनगर्यां वसतां गोविन्दसूनुना विदुषा,

वेंकटरमणेन कृता भूसुरवर्येण जयति शैवकथा ॥ १ ॥

द्राविडवाक्यमनोहररूपा शिवभक्तकोटिसल्लापा ॥

तंजानगरशमीवनमहिमा टीका भवाब्धितरणैका ॥ २ ॥

மார்பகர் கற்ப தாருமன் சயந்தான்
கொண்டலைக் கடுக்கு மண்டலைக் கொடையான்
வண்டடர் கொழுந்தார மணித்தொடை யாகன்
சந்திர முகத்தான் றந்திர மியாவுங்
கண்டவன் முத்தமிழ்க் கவிபுகழ் சீர்த்தி
யெண்டிசை பரவ வியல்புடைச் கருணைன்
தாயகம் புவிக்காங் தருவாசு தேவ
நாயகன் பூரண சந்திரோ தயநகு
மச்சத னிற்கடைந் தளித்தன வியாவரு
மெச்சி யயின்று வியன்பெறு வண்ணம
சீவகா ருணியந் திகழும்
பூவக மிருந்த புரிவொடு மாதோ.

---

தஞ்சைக் கருந்திட்டாங்குடி
ம-௱-௱-ஸ்ரீ
## கண்ணுசாமிசெட்டியாரவர்களியற்றிய
வெண்பா.

கஞ்சன்மாற் கெட்டாக் கருவேல நாதனமர்
தஞ்சைத் தாமகிமை சார்சரிதம்—நெஞ்சமுழ்த்திக்
கொண்டார் துதித்தார் குவித்திருகை யானந்தங்
கண்டார்விண் ணோர்புவியின் கண். (க)

வெங்கடட ராமனெனும் வேதியர்கோனுன் மேலோர்
தங்கட் கமுதாய்த் தழைத்தோங்கிப்—பொங்குங
கடல்போ னடந்ததுவே கண்டெய்யு மாறு
வடகலைமான் றென்கலையாய் வந்து (௨)

அசசுதற்கு வேள்போ லருங்கிருஷ்ண சாமிக்கு
மெய்ச்சுதனைத் தோன்றி விளங்கவதை—பசசவிட டுச்
சீர்பெற்றான் பெற்றான் ஜெயவாசு தேவனெனும்
பேற்பெற்றோ ரோர்பெறுவார் பின். (௩

# சிறப்புக்கவி.

தஞ்சைக்கருந்திட்டாங்குடி
ம-ள-ள-ஸ்ரீ சிவராமபிள்ளையவர்கள்
குமாரர்

## சோலைமுத்துப்பிள்ளையவர்கள்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வடமொழியிற் பிரமாண்டம் பௌடிகத்து முன்னாகுஞ்சை
மான்மியத்தைப்
படமிலகும் பணியாலுஞ் சொலற்கரிய திருக்கரந்தைப்
பதியில் வாழுந்
தடமலிவேங் கடராம விப்ரசிகாமணிவரைந்தான் றமிழா
லஃதைத்
திடமிகுமா மதிவாசு தேவனச்சிட் டுலகமெங்குஞ்
சீர்பெற்றானே.

ஷையூர் பேட்டை வசுபடு
ம-ள-ள ஸ்ரீ

## அருணாசலப்பிள்ளையவர்களியற்றிய

ஆசிரியவிருத்தம்.

கந்தமல ரோடையிற கரிமூல மேயெனக் கடைருள் செ
யுங்கண்ணனே
காவென்று முனிவருந் தேவரு மிறைஞ்சிட்ட கண்டியிலே
பாரவி னீதமே தானை
அந்தசாயு தத்திற்கிலக்காகி யேபுகழ டைந்தவசு
ரனாமருந்த னென்
றன்னவன் பெயரைப் புனைந்ததல மான்மிய மமர்ந்த
வட கலையாழி யைச
செந்தமிழ்ச்சொன்னமத்தாற்கடைந்து தென்கலைவழி திரண்டுதெள்
ளமுதமூரச
செய்தவன் வெங்கிட்ட ராமனென் பூசுரசி காமணியெ
னப்புகழுந் தே
மருசுகிர்த ராககொடைத ருங்கிர்ஷ்ண சாமிமகவான்செய்த
வத்து தித்து
வாசுதேவசிக தாமணியெனப்பலரு மகிழவச்
சிட்டனனரோ.

---

சிவமயம்.

# தஞ்சைத்தலமான்மியச்சுருக்கம்.

நீபங்கர் அம்மாபேட்டையிலிருக்கும்
ஸெகண்ட்ரீஸ்கூல் மாஸ்டர் ஸ்ரீ

## தெ. ரா. கிருஷ்ணையரவர்களால்

இயற்றப்பட்டது.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

பொன்மலி புகழே னுடைய பொழிலினும் பொழிலுற மேரு
வனமலி விடபிமல்கி வளம்பொலி சமியா ரண்யங் [குழும
தென்மலி பராசர் தம்மாற் சிறந்தவா னமுத வாவி
மன்மலி வசிட்ட தீர்த்தம் வானவர் மகிழ்வின் ஞேற (௧)

பாசிலை மணியா லுற்ற பண்புலா மணிமுக தாரு
வாமுடைச் சிவனாற கங்கை மற்றுமா சகரறு விக்க
தாமிகுந் தீர்த்த மேனமைத் தஞ்சபு ரீசரொண்மை
பரவுமின் னிசையா மொக்கும் பனுவலா னந்த வல்லி (௨)

விருத்தவம் பிகைபற் பூர வீடுபின் னிறுத்த காதை
வருத்தமன பருகு மாறறு வலம்புரி நாதர் வாலை
யொருத்தலை நிகர்த்த கண்மா உரமரு உஞ் சிங்கப் பெம்மான்
திருத்தகு நீலமேகத் தேமணி மருட்டத் தம்மான் (௩)

அன்னபூ ரணிஞா னம்பா ளகமுறுங் கொங்க ணேசர்
நன்னர்ச்சங் கீரநா ராயண்ணினகு மெழிலவா லாம்பாள்
பொன்னமர் பிரகதீசன் புறமுலாம் பிரகதம்பாளு
பனைல மளிகருஞ் சித்தி பாவிய வட்ட காளி (௪)

தஞ்சனே டமரிழைத்த காமள வருணக் காளி
மஞ்சமர் பவளக் காளி வலமிகுங் கோடி யம்மை
கஞ்சனே மிருடி விண்ணோர் கனங்கிறிக் கிழவன் வேதச
செஞ்சொலாற் றுதிகதுப் பூசை செய்தமாத் தஞ்சை

பச்சிமங் கடிகை யைந்திற் பலாசமன் னவனும் பூத்த
வச்சிர காமத் தீர்த்தம் வரங்கிளர் கபிலை தீர்த்தம்
உச்சகௌ தமனார் தீர்த்த முராபிரு சண்டி தீர்த்தம்
வச்சிராக் குளம வீசன் வச்சிர வல்லி மாதோ (௬)

அரிகர குமரன் பூர்ண பொற்கலை யருளு ளாவும்
பரிமுனி மேடை லிங்க வதனமால் பதும மங்கை
எரிவிழி யளிக்க முற்ற வேகேசி யம்மை சோதி
விரிமணி லிலவுங் கோயில் விளங்குறு வல்ல க்ஷேத்ரம் (௭)

பிக்கமா மணிமுத் தரு தோன்றிட மாய மேன்மைத்
தக்கனற் குறிச்சி யென்னுந் தலந்தச கடிகை மேலாந்
சொக்கமர் பரத்து வாசர் துதிபமூர் தட வீசன்
அக்கலை தொழிக்கு விண்ணோ றருகொரு குரோச மன்னே

மேலுறை நதியின் ஞாங்கர் விளங்குகை ராச நாதன்
பாலுமை நியம மோவா வத்திரி பணிந்த க்ஷேத்ரம்
மாலுடைக் கயற்கண் மீனள் வடிவுடைச் சுந்த ரேசர்
வாலுடைக் கூடலூர் பொற் றாமரைத் தீர்த்த மன்னும் (௯)

கோதின்மா தவஞ்சி றந்த கோதமன் றொழுத க்ஷேத்ரம்
காதிமன் மகன் பூசித்த கவினுறுங் காமன் மல்கிக்
கிதமன் னியபூ மாலை ரவுத்தனுங் கீர்த்தி யீசன்
ஓதருஞ் சதுர்க்கு ரோசத் தூற்றுதி சான்ய பாகம். (௰)

சத்திபூ சனைசெய் திட்டைத் தலந்திரு வாணி யன்னம்
பத்தியார் கணங்க ளுக்குப் பகுத்தவன் னப்பன் பேட்டை
சுத்தமா ணிக்க வாசச் சுவாமியின் றுதிக்காச் சபைச்
சித்திர மாகச் சம்பு பற்றிய சிறப்புப் பாலாம் (௰௧)

கரிக்குடி யென்னும் க்ஷேத்ரம் நாற்குட னொருகுரோசம்
அரிக்கனல் சிகர மீதி னளப்பரு நாட்ட மங்க
விரிக்குநாற் கற்பு வாய்ந்த மினிசருந் துதியாம் பூவைப்
பரிக்குமன் பணியி னுறும் பயிற்றிட லரிய செல்வம் (௰௨)

பொன்மிகு மருணை யோங்கி வாகையன் பொடுபு ரிந்த
வான்மிகு தீபா ரண்ய மாந்திரு வளரும் க்ஷேத்ரம்
பான்மிகு மட்ட நான்கு பகடறம் வளர்த்த மங்கை
தோன்மிகு மதிய வேணிச் சுடாருணாச லேசர் (௰௩)

இலங்குவ தைந்தி னோடைந் தெண்ணுடைக் கடிகை கேம்பா
அலங்குமக் கினியின் றிங்க ளாறுரு ரோசத் தூற்ற [ல்
பொலங்குல வேறு மெய்யர் புரிவொடு வதிக்க தாய
தலங்குல வணியுற் றோங்குஞ் சத்தமா விருடி கத்தம் (௰௪)

இத்தகு மூர்த்தி தீர்த்தந் தலமெனும் விசேட மேய்ந்த
மூத்தர்க ளோத்துந் தஞ்சை மூறுமமர் மான்மிய முன்னர்
வித்தகன் முதல தேவர் வியப்புறக் கீர்வா ணத்தாற்
சுத்தகற் றவனி யாசன் சூதமா முனிவற் கோத (௰௫)

சௌனகா தியர்க்கச் சூதன் சாற்றினன் பெமான் டத்தும்
பௌடிக புராணத் துஞ்சீர் பராயவிச் சரிதந் தன்னை
[கேட்டோர்
ஔவியமிற் குணத்தி னோடாய்ந் தன்பொடு படிப்போர்
[கிட்டோர்
வௌவமா வரைந்தோ ரன்றுற் கிரும்பொருள் கொடுத்தச்

இம்மையின் மிகுந்த செல்வ மேயசம் பத்தி னோடு
செம்மையா வாழவ ரீற்றிற் பிறவுல கனைத்து மின்ற [வும்
கோமளையா ருண்ணுக் கொங்கைக் கௌரியோ ரிடங்குலா
அம்மையார் சிவலோ கத்தை யடைகுவர் சரதம் மாதோ

## வாழி.

சந்திர னிரவி வாழ்க சதாசிவ னுமையாள் வாழ்க
மந்திர மறைகள் வாழ்க வாணிகந் திருமால் வாழ்க
அந்திர மழைகள் வாழ்க வாசர்செங் கோலும் வாழ்க
இந்திர னிமையோர் வாழ்க விந்தமான் மியநூல் வாழ்க.

---

சிவமயம்.

# கருவேல்நாதசுவாமி தோத்திரம்.

## விருத்தம்.

ஓதற்கரிய பரிபலநூ லெண்ணெண்கதவனுமை வசிட்டமுனி
பூதலனுருண்டவமாற்றினோர் பெண்மைப்பொருளே வரமருள்வாய்
சூதக்கமலத் திருமாது துலங்குஞ் செல்வக் கரந்தைதனிற்
காதற்பிரக தம்மையுடன் கருவேலமர்முக் கண்மணியே. (௧)

இருமையுளினும் மரிவேக்ந் தெழிலார்குறையே யிலகிரதத்
தருமைக்கதிரின் சாபமொழித் தருளைத்தந்தோய் வரமருள்வாய்
பெருமைப்புவியின் னூற்றிலதம் போலப்பிறங்குங்கரந்தைதனிற்
கருமைப்பிரக தம்மையுடன் கருவேலமர்முக் கண்மணியே. (௨)

விண்ணுமதியின் கொடுஞ்சாப வினையைத்தவிர்த்த மிளிமருந்தே
மண்ணூர்மழுமான் கழலூரி மணிவிற்கரனே வரமருள்வாய்
பண்ணூர்அலமேர்க் கிதமளி பயிலுஞ்சோலைக் கரந்தைதனிற்
கண்ணாபிரக தம்மையுடன் கருவேலமர்முக் கண்மணியே. (௩)

னாமங்கிக்கூங் கலிக்காலச் சோழன்கருநோய் தனைமாற்றும்
மாமந்திரவைந்தக்கரமா மணியேசரணம் வரமருள்வாய்
நேமந்தவிர்த்தார் கண்காணு நெறியேநெறிசேர் கரந்தைதனிற்
காமர்ப்பிரக தம்மையுடன் கருவேலமர்முக் கண்மணியே. (௪)

விதியோர்தருமன் முதலாய விண்ணோர்பரவுங் கரந்தைநகர்ப்
பதியேபரமே நித்தியமே புவனக்குன்றே வரமருள்வாய்
மதியேமலரே நவமணியே மறையே மறையுங் காணரிய
நிதியேபிரக தம்மையுடன் கருவேலமர்முக் கண்மணியே. (௫)



உ

சிவமயம்.





திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ பெரியநாயகி சமேத

சமிவனேசப் பெருமான்

திருவடி துணை.

# தஞ்சைமாநகரம் தலபுராணம்.

காப்பு

## சுவேத விநாயகர் துதி.

(கலிவிருத்தம்.)

மஞ்சுதோயு மதுமலர்ச் சோலைசூழ்
தஞ்சை மான்மியஞ் சாற்றக் கடல்வரு
நஞ்சு கொண்மிடற் றானுமை நல்கும்வெண்
குஞ்சரச்செஞ் சரண்சிர மேற்கொள்வாம்.

## சமிவனேசர் துதி.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தேனிருக்கு மலரிருக்குந் தேவனங்கமிருக்குமழு
திகழ்பிறைகம்
மானிருக்கு மிடக்கின்மலை மயிலிருக்குமிறையை யன்பால்
வழுத்தத்தீமை
யானிருக்குமியமனைய னிருக்கிருக்குமாற்றிவழிக்
கிழுத்துமேலாய்த்
தானிருக்கும் பதமளிக்குஞ் சமிவனப்பெம்மானிருதா
டலைமேற்கொள்வாம்.

---

## பெரியநாயகியம்மைதுதி.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மறைதுதிக்கெட்டாளேபொரு மயிடனைச் செற்றாளேதிரு
வளருந்தென்னன்
நிறைதவத்துற் றாளேவிழி நிலவியமீ னாளேயான்
நிகரிலேனுக்காற்
குறைதனமுற்றாளேகயங் குகனையும் பெற்றாளேகருங்
குழற்கு வாய்ந்த
நறையணிந்தாளேபெரிய நாயகிதன் மலர்த்தாளை
நயந்து வாழ்வாம்.

---

## நடேசர் துதி.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

புவனமெலாந் தொழில்புரிந்திங்குய்வான்மிக்கப்
பொறைகடந்த கருணையுள்ளப் பூர்த்தியாலே
நவநதியாரிதழிமதிச் சடிலமாட நற்குழைப்பூண்
பணிமழுமான் நவிந்தன்றாட
குவலயமாமொண்ணில் சராசரங்களீன்ற
குஞ்சரியுமுளக்களிப் புக்கொண்டுபோற்ற
தவமிலங்குந்தில்லைபொன்னம் பலத்துளாடுந்
தனிநடராஜன் கமலச் சரண் சார்ந்துய்வாம்.

---

## தக்ஷிணாமூர்த்தி துதி.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கதிர்மலராசனக்கடவுள் புதல்வர்களாநால்வருக்குங்
கல்லாலின்கீழ்
மதிமுடிநஞ்சுறை மிடறுமறைத் திவலின்றறியாது
வகைகளையச்சுட்டி
இதுவதுவெவ் வுணர்வொணாக் கன்னிலையெலாமியம்பா
தியம்பிநாளுஞ்
சதுமறையின்பொருளான தக்ஷிணாமூர்த்திபதந்
தலைமேற்கொள்வாம்.

---

## ஸ்ரீமந்திரகுரீஸ்வரர் துதி.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பூவிலாக்கமலமில்லாப்பொருந்து புத்தேளிர்தங்கள்
தாவிலாதெழுந்தசோதித் தத்துவன்மறையொன்றென்றே
நாவிலாக்கொண்டுமெவ்வா சடங்கியநலத்தாருள்ளங்
கோவிலாக்கொண்டாண்மந்திரகுரு பரனடிசார்ந்துய்வாம்.

---

(வழிபடுகடவுள்.)

## சுப்பிரமணியர் துதி.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

கந்தப்பாமாலையன்பர் சாற்றவுள்ளங்
களிப்புறுஞ்சண்முகநாதனேக் கடையேனுக்கு
கந்தப்பாதலைக்குமில்லைச் சாகரத்திற்
கரைகாணத்தானேன் கண்பார்த்தென்னை
கந்தப்பாகியகொடியேனெனினுமேழை
கவலையறப்பிறங்குமணிக் கழலின்பாங்
கந்தப்பாதருள்வாய்மா விருவர்பாங்கிற்
கலாபமதிலிலங்கிய பன்னிருகையானே.

---

## கலைமகடுதி.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அன்பெனுங்காத்தா லனியுருவிதய
வருமலர்தொடுத்துநின்றறிஞர்
என்புநெக்குருகப்பாவியதவள
விதழின்முண்டகத்தடிக்கியைய
மன்பெரும்புலன்களொருங் குறத்தாழ்ந்து
வாழ்த்தியம்மலரடிசாத்தத்
துன்பெலாமறுத்தாள் வாணிதண்ணடியைத்
தொழுதுறும்பவப்பிணி தொலைப்பாம்,

---

## சிவனடியார்கள் துதி.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திரிகரண மியாவுமுத றிருவடிக்கே யாக்கிமறைச்
செயல் வழாது
உருவருவ மெனைவ்யுமவ னென்றென்றே யுள்க்குறிப்பா
லுன்னி நோக்கிப்
பருவமுதிர் கனியாகித் தேனூறு சிவானுபவப்
பத்தராகிக்
கருவகற்றிக் கலைந்த திருநாயன்மா
ரவர்கள்பதங் கருத்துள் வைப்பாம்.

---

## அவையடக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உமியைநீர்த்தரிசிகாண்பா ருலகநீத்தொளியைக் காண்பார்
குமிகைநீத்ததினைக்காண்பார் கொள்கைபோற் சிவபுராணம்
அமிழ்தமாங்கொந்தமுன் னுள்ளடங்கியதறியான் புன்சொற்
றமிழிலறிஞரீது தள்ளிநன்குணர்வாராமே.

---

## நூற்பயன்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மதிநதிச்செஞ்சடிலவசிட்டேசர் தஞ்சை
மான்மியமென்றுவந்து செவிமடுப்போர்யாரும்
நிதிமிகும்பல்பொருட் குரியராகிப்பூவில்
நீடுசுதன்பௌத்திரரு நிலைபெற்றோங்க
அதிபதியாகிடுவர் கொடுமிடியினண்ணு
தந்தியத்தந்தகன்வாதை யகன்றெஞ்ஞான்றுஞ்
சதிபதிதாட்கண் புடையாகிநித்ய
சாயுச்சியமெனும்பதத்தைச் சார்வார்தாமே

பாயிரமுற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# தஞ்சைமாநகரம் தலபுராணவரலாறு.

அகண்ட பரிபூரண சச்சிதாநந்த சிற்சொருப சர்வசாட்சியின் திருவருளால் விளங்காநின்ற உலகின்கண் நவகண்டங்களுட் சிறந்த பரதகண்டத்தில் தவம்புரிதற்கு மிகுந்த பரிசுத்தமாகிய நைமிசாரண்யத்தில் வசிக்கும் புண்ணிய வடிவமாய் விபூதியுத்துளன திருமேனி பிரகாசிக்கும்படியான நாற்பத்தெண்ணாயிரம் சௌனகாதி மகாரிஷிகளின் விருத்தாந்தங்களை விவரமாயறிந்துணர்த்தவெக் கவிஞர்களுக்கும் எளிதாமோ அவர்களில் பிரமச்சரிய கிரகஸ்த வானப்ரஸ்த சந்யாச பரமஹம்ச பரிவ்ராஜ அவதூத காபாலியெனும், அஷ்டாங்கங்களையுடையவர்களும், ஆணவாதி மும்மலத்தொடக் கொழிந்தவர்களும், சோதிசொருப தியான நிஷ்டர்களும், வாயுபக்ஷணி, ஜலபக்ஷணி, கந்தமூல பக்ஷணிகளும், ஆத்ம, தத்வ, பிரமஞானிகளும் அநேக வைராக்கிய விரவிரதியர்களும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை . சதா வுச்சாரணஞ் செய்யுமநாவுடையவர்களும் இன்னும் பலவிதமாகிய தபோநிதி

...ராய் வசிக்கும் சௌனகாதி மகாரிஷிகளிடத்திலே ஜெனன மரணவாதை யொழிந்தவரும் சிவானந்தானுபவ மேலிட்ட வுள்ளமுடையவரும் சிவரஹசிய முற்று முணர்ந்தவரும் சைவ தவக்கோலந்தாங்கிய வடிவத்தோடுதித்தவரும் அஷ்டாதச புராணங்களோதிகாத்தழும்புற்ற வியாச மாணாக்கருமாகிய பூதபௌஷிய வர்த்தமானங்களை யுணர்ந்த சூதபுராணிகர் யெழுந்தருளினார். அப்போதங்கிருந்த சௌனகாதி மாரிஷிக்குழாங்கள் யெழுந்து அத்தவமுனி சிரேஷ்ட சூதமுனிவரையெதிர்கொண்டு, ஆனந்தத்துடன்கண்டு, பக்திவிநயத்துடனின்று, ஆநந்தபரவசமுட்கொண்டு, ஈங்கெழுந்தருளிய தெங்கள் புண்ணியமென்று, தங்களாச்சிரமத்துக் கழைத்துக்கொண்டு, வந்து ஓர் திவ்யாசனத்தி லெழுந்தருளுவித்து, பரிமளமலரினாற் பாதத்தி லருச்சித்து, பலவிதமாகக் கொண்டாடித் துதித்து, இனிய வசனங்கள் கூறி, பரமாநந்த புளகாங்கிதமேறி, மனமிக வொருங்காய்த்தேறி, யோர் விண்ணப்பஞ் சொல்லலாயினார். வை செக்ராட்டாராகிய சௌனகாதி மகாரிஷிகள், ஹே சுவாமின் பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்து சாட்சாத் ஈஸ்வரனது திருவடிக்கன்பு பழுத்தொழுகும் சூதமாமுனியே? இதன் முன்னமே யாங்கள் செவிப்புல மடுத்துய்யும்படிக்கு, காவிரிநதியின் வடதிரத்திலுள்ள திருக்கழுமலமெனும், சிதம்பரம், திருவண்ணாமலை, திருக்காஞ்சி, திருக்காளாத்தி முதலிய தலமான்மியங்கள் முழுவதும் திருவாய்மலர்ந்தருளினீர் அவ்வசனத்தை யாங்கள் சிரவணஞ்செய்து சித்தபரிபாக மெய்தி யெடுத்த தேகத்தினாலாகிய பெரும் பேற்றினையடைந்தோம். அப்போது திருவுள மகிட்சியால் அனுக்கிரகமாயுரைத்தருளிய சமிவன மஹாத்மியத்தை இப்போது விரிவாக வெடுத்துரைத்து யாங்களுமுமுட்சுவத்தை யடையும்படித் தேதுவாகிய சமிவனேசரது கதாமிர்தமே விளம்பவேண்டும். கருணைக்கோரிலமாய்ப் பிரகாசிக்குங் காருண்ய முனியே யென்று பலவித வ்தோத்திரங்களாற் கூறிய விண்ணப்பத்தை யோர்ந்து ஆநந்தித்து ஓகோ நைமிசாரண்யவாசிகளே நீங்கள் வேதங்களை முற்று முணர்ந்த ஆத்மஞானிக ளானதால் சாட்சாத் சிவபெருமானது கதாமிர்தமே வேண்டுமென நன்கு வினவினீர்கள் என்று சூதமகாமுனிவர் உளங்களித்து பரவச புளகாங்கிதமாய் ஆநந்த பாஷ்பமுதிர கரத்தைச் சிரத்திற் கூப்பி குருவாகிய வியாசபகவான்

பாதபத்மங்களை உளத்தில் தியானித்து சமிவனேசர் யெழுந்தரு ளியிருக்குந் திசையை நோக்கி எழுதிய சித்திரப்பாவை போல ஒரு முகூர்த்தம் வரையில் சிவத்தியானத்தில் நிஷ்டைகூடியிருந்து நிமிர்ந்து அம்முனிவர்களை நோக்கி ஆஹா ! நும்பொருட்டால் மகா சமிவனக்ஷேத்திரமஹாத்மியத்தைக் கூறும்படியான பேறு பெற்றேன் ஆனால் அத்தலத்தின் சரித்திரத்தைப் பக்தி விநயத்தோடும் கேட்பவர்களுக்கு பூர்வ கர்மங்கள் யாவும் இரவி முன்னிருள்போலாம். இஷ்ட காமியார்த்த ஐஸ்வரியங்களையு மடைவர். திருவருட் செல்வமும் மெஞ்ஞானமும் கைகூடும். எப்புண்ணியமும் பிராப்தமாகும். இஃது சத்தியமென்று மும்முறைமொழிந்து கூறத்தொடங்கினர். ஓகோ நைமிசவாசிகளே ! பூர்வமிச் சரித்திரம் ஸ்ரீகயிலாயத்தில் அருட்சத்தியாகிய உமாதேவியாருடன் பச்சைகிரியும் பவளகிரியும்போலுமிலங்கிய பரமசிவனது திருவாக்கினால் திருநந்திதேவருக்குபதேசித்தருளினர். அங்ஙன முபதேசித்தருள்பெற்ற நந்திதேவர் ஸநற்குமாரமுனிவருக்குபதேசிக்க அவரால், வியாசபகவானுக்குபதேசிக்க, அவ்வியாசபிரான் யெனக்கோதியருளிய, அஷ்டாதசபுராணங்களில் பதுமபுராணத்திலும் பிரமாண்டபுராணததிலும் சொல்லப்பட்டிருக்கின்ற சமிவனக்ஷேத்திர மான்மியத்தை இப்போது சொல்லுகிறேன் கேட்பீரென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

தலபுராணவரலாறு.

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

## இரண்டாவது

# தண்டகாரணியச்சருக்கம்.

(கலிவிருத்தம்.)

பாடலம் புன்னைகா நீடுசெண்பகமா
பாங்கரும் பலர்தூநைமிசக்
காடுறுஞ்சௌனக திபுங்கவர்கள்
காதலோடு சிவகாருண்யந்
தேடலன்புடையோ ரென்று சூதமுனி
சீலமாதவர்மேல் நண்புகொண்
டாடலாகிசமி யாரண்யப் புதுமை
அன்பினோடவர்மு னருளுவார்.

ஓகோ நைமிசவாசிகளாகியசௌனகாதிமாரிஷிகளே! பெரிய தண்டஹாரண்ய விருத்தாந்தத்தைக் கேட்பீராக: அரியயனாதி தேவர்களுக்கெல்லாம் நாயகனும் சர்வாந்திரியாமியாயும் சிருஷ்டி, திதி, சம்ஹாரம், திரோபவ அனுக்கிரேகங்களை லீலையாகச்செய்பவருமாகிய கயிலையங்கிரியில் வசிக்கும் சாட்சாத் சிவபிரானது திருவிளையாடலிலொன்றாகிய சமிவனத்தின் பெருமையோ பூர்வம் இராதந்திர கற்பகாலத்திலே இப்போதுகோதாவரியென்றுவழங்குகின்றதே அத்தீரத்திற்குத் தெக்ஷணபாகத்திற்சுற்றிலும் நூறு யோசனை விசாலமுள்ள ஒருபெரியதண்டஹாரண்யமொன்றுண்டு அந்தவனத்தின் வாசமாகிய மிருகம் பக்ஷியூர்வனமுதலிய ஜெந்துக்களின் விபரமும் தருக்கள்முதலிய விசேஷங்களையும் சேடனாலும் உவமித்துச்சொல்லவரிதாகும். அப்படிப்பட்ட வனத்தில் நான்கு இராக்ஷதர்களுமுண்டு அவர்களோ பூர்வம் அந்தரத்தில்இரணியக்கோட்டையுள்ள நிவாதகவசர் காலகேயர்க ளிருந்தார்களே அவாளதுபாரம்பரையிலுள்ள தஞ்சகாசூரன், தாருகாசூரன், வலாசூரன், வச்சிராசூரனென்ற நால்வர்களுடைய விருத்தாந்தங்களும் பின்வரும் கதையாலறியலாம். அவர்களின் நாலாவதுசொல்

வேய வச்சிராசூரனென்பவன் ஒருகாலத்தில் உத்தர திக்குக்கதிபனாகிய இயக்கர்கோனென்னுங் குபேரனுடைய அளகாபுரியிற்சென்று அதுமசப்படுத்துவது நிமித்தம் போனதறிந்து அநேகபராக்கிரமருடன் வெகு பாணப்பிரயோகங்களினாற் பன்னிரண்டுநாள்வரையிலும் போர்புரிய வச்சிராசூரன் புறங்காட்டி தான் வசிக்குந் தண்டகாரண்யம் நோக்கி ஓடிய அவனைவிடாமற் குபேரன் விமானத்தோடு திரத்தி அத்தண்டகாரண்யத்தில் வந்து அவனையும் பற்பலபடைகளினால் வனத்தில் யுத்தம்பண்ணி அச்சூரனையும் சம்ஹாரம்பண்ணினான். பின்பு குபேரனானவன் இவ்வனத்தின் விநோதங்களைக் கண்ணுற்றவனாய் ஆச்சரியமடைந்து தமது விஸ்வகர்மனை நினைக்க கன்மியன் வந்து சரண மடையக்கண்டே ஓ தெய்வசிற்பியே இவ்வாரண்யத்தை ஓர் சிறப்பான நகரமாக்கக்கடவேயென்று ஆக்ஞாபிக்க கருமான் மகபதியுத்திரவினால் அதிவிச்சித்திரமான மாடமாளிகை கூடகோபுர ஆஸ்தான மண்டப உப்பரிக்கை, பளிங்கறை, மாணிக்கஸ்தம்பங்கள், வைரப்பொதிகை, சுவர்னச்சுவர்கள் பவளவுத்திரங்கள், நவரத்னமிழைத்த அட்டைகள், சித்திலப்பந்தல்கள், பச்சையால் பல்கணிகள், கோமேதகக்குடங்கைகள், இப்படிக்கு நவரத்னகசிதமாக இரண்டாயிரவீதிகளடங்கிய ஓர் பட்டினமாகக் கணப்போதிற் அளகாபுரிக்கு நிகராகச் சிருஷ்டித்தனன். இந்நகரத்தின்கண் தேவாலயம பிரமாலயமுதலாகிய பற்பல க்ஷேத்திரங்களுண்டுபண்ணியதில் அழகீஸர் அமலாம்பிகையென்று நாமதாரணமுடைய ஒரு தெய்வஸ்தலமானது குபேரனால் பிரதிஷ்டைசெய்து கஸ்யபர்யென்ற ஓர் மஹாரிஷியாற்பூஜிக்கும்படிசெய்து. அந்தஸ்தலமிப்போது வழங்கு நாமகரணம் பின் கூறுவோம். அப்பேர்ப்பட்ட அளகாபுரிக்குச் சமானமாகிய நகரத்திற் புட்பகவிமானனு நார்பிரானுமாகிய இயக்கர்கோனால் அகிலாண்டகோடி பிரமாண்டநாயகரான சிற்சொருப அழகீஸர் அமலாம்பிகைக்குச் சுவர்ண கைங்கரியங்களியற்றிய வியப்பையும் நடாத்தும் பணிவிடையினது சிறப்பையுஞ்சேடனாலுவமித்துச்சொல்லுதற்கரிதானமகாவைபவத்தை நாளால் வருணிக்கவெளிதாமோ. திருநேத்திர கருணாமூர்த்திக்கு நண்பனாகிய தனதன் நிறைந்த மஹா ஐஸ்வரியத்தையுமடைந்து சிலநாள் அந்நகரத்தையாண்டு அளகாபுரிக்கெழுந்தருளியபின்னர் மனுமந்து வண்மிகுத்தி லுற்பவித்த சக்கரவர்த்திகளாலுஞ் சிலநா

ளிந்நகரத்தை யாண்டு பரிபாலனம் செய்துவந்தார்கள். பிரம க்ஷத்திரியர், வைசியர், சூத்திரரென்னும் பலசமயிகளும் சிலமதஸ் தருமாக அவரவர்களின் வருணாச்சிரமங்களுக்குத் தவறுதலில்லா மல் ஒழுக்கமும், கல்விப்பழக்கமும், ஈசுரவணக்கமும், நல்லோ ரிணக்கமுமாகத் தன்மசீலர்களாக சமஸ்த ஐஸ்வரியவான்களாக வும், யெம்மாதமும் மும்மாரிபொழிய தனதானியசந்தானவிர்த்தி யுடன் சுக்கிலபக்ஷ சந்திரனைப்போல் விர்த்தியாய் செழிப்புடன் அனைவருங் களிப்புடன் வாழ்ந்து எழிற்பெருமிந்நகரத்திற் சுகித்து நன்கிருக்குங்காலையில் இந்நகரமட்டிலு நீங்க மற்றைய தேயங்கள் யாவுமமின்னுடன் மாரிபன்னிரண்டாண்டாக இல்லாமல் அந்தந்தத் தேயத்தில் வசிக்கும் பிரசைகளுக்கோ விண்ணீருமற்றுப் புவிநீரு மற்று விரும்பியழுக் கண்ணீருமற்று இறந்தோர் நீக்கி இருந்தோர் கள் யாவரும் இந்நகரஞ் செழித்திருப்பதுணர்ந்து இந்நகரடைந்து அவாளவாள் செய்யுந்தொழிலிற் ஜீவித்திருக்கின்றகாலையில் அக் காலத்தில் மூன்று இராக்ஷதர்கள் தஞ்சகாசுரனென்றுந், தாருகா சுரா வலாசுரன் யென்றும் பெயருடைசேர்தாாள் அவர்களோ கறு த்தநிறமும், விரித்தசிகையும், உரத்தபுயமும், பருத்த வயரும், குருத்தவிழியும், வெறித்தநடையும், நெரித்ததொடையும்,காத்திற் படையும், யெடுத்தசினத்துடன் பெருத்தபசியினால் வருத்துமன த்துடன் உக்கிரகோர தந்தங்களைக்காட்டி திண்டோட்காங்களை நீட்டி பற்பலகருவிகளைத்தீட்டி அடுத்திடும்பெரிய நாட்டில் விடு த்துயிரொழிந்த பிரேதங்களை வாட்டி உதரத்திற்கு வுணவாகப்பூட் டியும் சிலநாளொன்றுங்கிடைக்காமல் மனம்வருந்தி இந்நகரஞ் செ ழிப்புடன் ஜீவவிர்த்தியுடனிருப்பதைக் கேட்டுளம்பொருந்தி இந் நகரத்தில்வந்து நரர்மிருகம் பக்ஷிமுதலாகிய ஜீவன்களைவதைத்து உதரபூரணம் செய்துகொண்டிருந்தனர்கள். இப்படிக்கிருக்க இந் நகரத்தில் அமுர்தபுட்கரணி யென்றொரு தடாக மொன்றுண்டு. அந்த அமுதபுட்கரணியிணடுத்த சோலைகளோ :

ஆசிரியப்பா.

ஆலாசத்தி அகறகருங்காலி
பாலலர்கொன்றை பருவன்னிதேக்கு
பாலைமாவன்னி பாங்குபுங்கத்தி

நீலமார்கோங்கு நீள்புரசித்தி
பூவரசிலந்தை புளிபிராய்மூங்கில்
தாவுபேர்வாகை தருநொச்சிசிம்பு
நாரத்தைகொய்யா ரம்பாவெண்ணாவல்
எலுமிச்சுமாதுளை ஏர்முருக்கிலவு
கொக்குமந்தாரை கோங்கரிநெல்லி
வில்வம்பூவந்தி விளாவிடத்தாரி
காஞ்சிரமிலுப்பை கதிதேவதாரு
வடவாலுசிச்சில் மகிழூடணிலவு
நெட்டிசெங்கொட்டை நேர்வாளமொடுசிலை
சந்தகிற்கோட்டந் தருவினம்பலதே
படர்செடிகொடிகள் பைந்துணரனேகம்
பெயரறியாத்தரு பேசவுமரிதே

இப்போர்க்கொத்த இன்னும் பலதருக்கள்சூழ்ந்த இரவியொளிபடாத சீதளமுடைய சோலைகளில் வசிக்கின்ற மிருகம் பக்ஷிகள் பூர்வமுதலிய ஜெந்துக்களோ :

ஆசிரியப்பா.

கரிபரி இரலைவம் கபிலைமான்கடம்பை
அரிமகிழேறு ஆன்கள்பல்லூகம்
கொரிமயிடம்புனு கொண்டமார்ச்சாலம்
நரிமரைகுளிகன் நாகுசெம்மரிகள்
மட்டமுட்பன்றி வன்கோட்டுளுளி
சட்டமாய்பிடகு சமைமந்தியோனாய்
விட்டிபோற்றுவு மிகுகுரங்கணிகள்
குட்டியீழ்மந்திக் குலமுடும்போனன்
மேவுகத்தூரி மிருகமோடேனம்
தாவுமாமுயல்கள் தனிப்பலநிறமும்
தேவாங்குவோந்தி செங்குருட்டுக்கல்
காவதத்தொண்டைக் காண்டாமிருகம்
நாப்பிளப்பவஷ்ட நாகங்கள்பலது
கூப்புறுமாமைக் குழிப்பெருச்சாளி

வார்த்தைசொல்பல்லி மதுசெறிந்தண்டு
சிந்தூரங்காரஞ் செப்பியன்றிமிறு
மயிலனம்வெள்ளை மாடப்புறாக்கள்
குயினதிவாரைக் கூவியகோகிலம
அண்டில்லானசிட்டு அரியவல்லூறு
கண்டவெண்கௌனங்காண்கோழிகூளி
மணிப்புறாத்தூக்கணான் வானம்பாடிப்புள்
கலுடன்முட்கழுகு கரும்பருந்தண்டம்
கொண்டலாத்தி நாணி கூழைகடாவாய்
கவுதாரிநீளைக் கருதியகானயான்
கூவையோடாந்தை குலவியவலியன்
பச்சிகளினமும் பலஜெந்துமிருக
விச்சித்திரமதை விளம்பவுமரிதே.

இன்னுமனேகவிநோதமாயுள்ள சோலைகள் சூழ்ந்த சீதள அமிர்தபுட்கரணியின் வாருணதிசையில் இராக்கதர் ஒளிய, இளந்தென்றல் பரவ, மயில்களுலாவக், குயில்கள்கூவ, குரங்குலாந்தாவ, மிருகபக்ஷிகள்மேவ, புளகாங்கிதமாகத் தக்கதாகியசோலையின்கண் மகாவேதபாராயணபராசரிஷியானவர் ஆச்சிரமம்வகித்து நிட்டைகூடியிருக்கும். அச்சோலையின் வடபாகத்தில மணிமுத்தாநதியொன்றிருக்கின்றது. அந்நதியின் மகிமையும உற்பத்தியு மியாதெனில பூர்வம் திருப்பாற்கடலின் கண் தேவர்கள் அமிர்த மதனஞ் செய்யுங்காலையில் இயாதொரு பகவானால் ஸ்ரீபராசரருக்கு அமுதங் கிடைக்க அவ்வமுதத்தைக் கடத்திற் பதனம்பண்ணிக்கொண்டு மிகவும் சிறப்புற்றோங்கிய இச்சமியாரண்யத்தின்கண் அருந்தவம்புரியச் சிறந்த சிந்தையாய் மேற்கூறிய அமிர்த கடத்தை இப்புட்கரணியினுட் பதனம்பண்ணிவைத்து பரமாநந்தநிட்டை கூடிய. அந்தத் தபோநிதியின் மகிமையினாலும் அமிர்த விசேஷத்தினாலும் என்னுதற்கரியப் பண்ணவரீட்டமுங் கண்ணுதன் முதலாய் நண்ணும்படிக்கு விசேஷமுற்ற இந்தப் புட்கரணியின் பாங்கரிலுண்டான நதியின் பிரபாவத்தை யான் அறிந்தவாயிற் கூறுவோமெனச் சௌனகாதிமுனிவரர்க் குரைத்தனர் சூதபுராணிகர்.

ஆரணியச் சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## மூன்றாவது

# மணிமுத்தநதிச்சருக்கம்.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

விதிமுதலாயதேவர் வேண்டுமோ பதியின்பாதக்
கதிமறவாத சௌனகாதியர் சூதர்பக்கல்
துதிபுரிந் தையவிந்தத் தூய்மணி முத்தாறுற்ற
நதியினன் மான்மியத்தை நவில்கென நயந்து நின்றார்.

இந்தப்பிரகாரம் அன்புடனே இறைஞ்சாநின்ற சௌனகாதி புங்கவர்களை நோக்கிச் சூதபுராணிகர் திருவாய்மலர்ந்தருளுவார். ஓ நைமிசாரணிகளே! இந் நதியின் மகாத்மமோ வாரணாசி க்ஷேத்திரத்திற்கும் பதின்மடங்கதிகமுளது. பூர்வத்தில் உமா மகேஸ்வரியும் சாட்சாத்காரனாகிய சிவபெருமானும் ரிஷப வாகனரூடராய்க்கணகோஷ்டிகளுடனே செகத்திரக்ஷகார்த்தமாய்ச்சஞ்சரித்துக்கொண்டு இச் சோலையினுடைய சிறப்பையும் மகா புண்ணிய சீலரான மகான்களுடைய மோனநிஷ்டையின் வியப்பையும் ஓர்ந்து அமுர்தபுட்கரணியின் சோலையினிடமிறங்கினார்களாம். அப்பொழுதச்சோலையினது கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, புதற்பூவென நான்குவிதமாகிய புட்பங்களலர்ந்தும இழுந்தென்றலாற் பரிமளிக்கவும் தேனினமுறாலும் பூந்தாதுகள் மகரந்தப்பொடிகள் சொரியவும் தேறலிற்றாம்பிய தும்பிகள் ரீங்காரம்பாடவும், அம்சாதிகண்முதலிய மஞ்ஞைகளாடவும், தேவதாவாதியமெனச்சோலையிலுள்ள பக்ஷிகள் பிருதாக்களியாவும் உமாபதியினது தரிசனக்கருணையைக்கொண்டு உளங்களிப்புற்று பல்லியமுழக்கம்போலார்ப்பரிக்கவும் கதலிபலாமரங் கனிகளிழிந்த தேனருவிகளோடவும், இப்பேர்ப்பட்ட மகாவிநோதங்களையெல்லாம் பகிரண்டதிக்கெலாண்ட அகண்டபரிபூரண சச்சிதாநந்த சாட்சாத்காரமாது மகேஸ்வரியுங் கிருபாநோக்கமாகி யுண்மகிழ்ந்திருக்கும சமயத்தில் காரணங்கடந்த நாரணியான பரிபூரணசத்தியானவள் ஈஸ்வரனைநோக்கி இச்சோலையினது சிறப்புக்கும் பக்கத்தில் உமது நண்பனாகிய குபேரனுலு

ண்டாகிய நகரத்தின் வியப்புக்கும் உவந்த மோக்ஷார்த்த காமிய ங்களும் பிரதி பலிக்கும்படியாகிய திவ்ய நதியொன்றருளினால் விசேஷமான பலனுண்டாகுமெனை. இன்பத்தோடு அம்பாள் வினவ ஈஸ்வரனும் உண்மகிழ்வடைந்து புன்னகையோடு உமாவை நோக்கி ஆனந்தத்துடன் அமலையினது திருக்கரத்தில் ஓர் முத்தா பரணமளித்து இதை உனக்கிச்சையானஇடத்திற் போடென்று விளவ அப்படியே உமாமகேஸ்வரியும் மானஸ்யமாய்த் தியானித்து தாராபரணத்தை நிருதிபாகமாய் வீசியவுடனே அவ்வாபரணம் ஒருயோசனைதூரத்திற்போய் விழுந்த தலத்தினின்று திரை, நுரை, திவலைகள்சிதறக் குமிழிகள்பெருக பிரவாகமானது எப்படிக்கிருந்ததெனில் பூர்வத்தில் பகீரதனுக்கு சடாபாரத்தினின்றுங் கங்கை விட்டொழுகியபோதும் திருவாலவாயில் மாணிக்கவாசகசுவாமியின் பொருட்டாய் வைகைப்பிரவாகம்பொங்கியபோதும் பொதிகாசலத்தின்கண் பொருனைமாநதி புரண்டெழுந்தாப்போலும் உமாமகேஸ்வரனளித்த முத்தாபரணத்தால் அம்பாளின்புற்று வீசியளித்த மணிமுத்தாநதிப் பிரவாகம்பொங்கி மேற்றிசைநின்று கீட்டிசைக் கொழுகியது. இந்நதி முத்துமணிமாலையா லுற்பவமானபடியால இந்நதிக்கு மணிமுத்தாநதியென ஈஸ்வரனால் நாமகரணமிட்டும் இந்நதியின்கண் பக்திவிநயத்துடன் யெம்மை மனப்பூர்வமாய்த் தியானித்து க்ஷேமநிஷ்டையாய் ஸ்நானம்பண்ணினார்களோ அவர் களுக்கு இரண்டு மக நிறைவேறியபலன் கிடைக்கும். இன்னுந் துலாவிருச்சிகமாதங்களில் புராதஸ்நானஞ்செய்துதற்பணமுதலிய கன்மங்களை முடிப்பவர்களுக்கு இரண்டஸ்வமேதயாகப் பலன் சித்திக்கும். இன்னுமிந்நதியருகிற் றென்புல மடைந்தோர்களும் அப்படி நிரியாணமாகிய பிதுர்தேவங்களுக்கும் கிரியாகர்மங்களை வழுவறநடத்தினால் அவர்களுக்கு நம்முடைய சாயுச்சியபதவி யடைவர்கள். யின்னுமிந் நதியின் மகான்மிய மறிவிலிகளாய் விசர்ச்சன ஆபாசங்களைச் செய்பவர்கள் முன்னால் எவ்வித புண்ணிய தவங்களைச் செய்திருந்தாலும் அன்றேயழியும். நன்கிருபையோடு தவவிர்த்தி நடாத்துவரித்தலத்தின் நதியருகாயிகத்தில் மோக்ஷார்த்த காமியங்களுடன் சகல ஐஸ்வரியமுமடைந்து முடிவில் நம்பதஞ்சார்வார்களென்பது நிட்சயமென்று உமாபதியாகிய பரமசிவத்தின்திருவாக்கினாலும் ஈஸ்வரிக்கன் புடனுரைத்து ரிஷபவாக

னருடராய் பார்வதிசமேதராய்க் ஸ்ரீகயிலைக்கெழுந்தருளினார். பின்னுமின்னும் இந்நதியின் மகாத்மியங்களில்சிலவர்த்தமானமுள்ளது இயாதெனில் தெக்ஷணதேசம் கோளசமீபமான ஓர் நகரத்தில் வேதவிற்பன்னு சர்வசாஸ்திரபண்டித மகாவைதிகனுமாகிய விஷ்ணுசர்மாவென்றொரு விப்பிரசிரேஷ்டனுண்டு. அவர்க்கோ விதலனென்றும் தத்தனென்றும் யிரண்டு புத்திரர்களுமுண்டு அப்புத்திரர்களைநோக்கி ஓ புத்திரசிகாமணிகளே யெனது ஆத்மாவிதேகமடைந்தபின் யென்னுடைய அஸ்தியையெடுத்து வாரணாசிகங்காவிற்சென்று புரோகிதமுகமாய்ச் சர்வதானங்களுடன் சங்கர்ப்பமுடித்து அந்நதியிற்புரோக்ஷிக்கவேணுமென்று சாதங்கைக்கொண்டிருந்த வேதியன் சிலநாட்சென்றடைந்தபின்னர் பிதாவாக்கியத்தின்படி கனிஷ்டகுமாரனாகிய தத்தனென்பவன் பிதாவின் அஸ்தியை சுவர்ணசம்படத்துளடைத்துகிரியாதிகளுக்காகிய திரவியமுமெடுத்து அன்னகைவிடுத்து பற்பலகான்வனாதேயங்களடுத்து பிதுர்அத்திசம்படந்தோண்மேலெடுத்து பிராமணோத்மசந்தாகநித்தியகன்மானுட்டானங்களை முடித்து பன்னாட்டின் பாட்டைகளை விடுத்து இந்நாட்டின் மணிமுத்தாநதிக்கரைச் சோலையிற் றகையுடன்வந்து தன் சோபதாகங்களை மாற்றி யெழுந்திருந்து பின் மேற்சம்புடத்தை நதியின் பக்கம் ஓரிடம்வைத்து ஸ்நானபானநித்யாதி மாத்யானங்களை நடாத்தி போசனாதிகளையு முடித்துக்கொண்டு இந்நதியின் சிறப்பையும், அமுதபுட்கரணியின் வியப்பையும், சீதளம்பொருந்திய தேவதாருபோற் பிரகாசிக்கும் சோலையினது வனப்பையுங்கண்டு ஆஹா இப்பேர்ப்பட்ட மகாவளம்பொருந்திய காவனங்கள், தடாகங்கள். நதிகளையுடைத்தாகின்ற பட்டினம் எப்பேர்ப்பட்ட அழகுற்றவோவென ஆச்சரியமடைந்து தனது கோரிக்கையின் பிரகாரம் யாத்திரைசெல்வோமென. அஸ்தி பாத்திரத்திடம் வருகையில் ஆங்கு பரிமளபுளகாங்கித கமனீகரமாகிய வாசனையைக்கண்டு நாம் வரும்போதிப்படிக்கில்லையே, இப்போது யிம்மணமேதென. எங்கேயுமுலாவிப்பார்க்கப் புலப்படாமல் பிதாவினது அங்கபாத்திரத்துள்ளிருப்பதோவெனத் திறந்துபார்க்கஅதில் அத்திகளின்றி மேற்சொல்லிய வாசனைதங்கிய மல்லிகாபுட்பங்களாகப் பார்த்து தேகங்களெல்லாம் வியர்த்து மனமொடுகாணுதிகள் திகைத்து இவ்வித ஆச்சரியத்தாற் பார்த்துப் பார்த்து நகைத்து தன்னையறி

யாது ஆனந்தபாஷ்பங்களுதிர நின்று நினைந்து மிக்கவைமகிமை
யாலுண்டாகியதோ அல்லது மகாகுருக்களின் பிரபையோ இப்படி
புலப்பட்டதேதோவென்று பிதுர்வாக்ய பரிபாலனமாய் அஸ்தமனை சிர
சிற்றாக்கி மனவொருவழியாகக் கோபாதிகளையெலாம் போக்கி
இந்நதியின்சோலையை நீங்கி அநேக க்ஷேத்ரங்களடைந்துபோய் செல்லு
கையில் சந்தியாகாலத்தருணம் ஓர் கிராம சமீபமாக ஓர் மகான் மிகு
ந்த விருத்தராய் விபூதிருத்திராக்ஷமாலிகாபரணமிலங்க
சிவகளையோடு விளங்கிய ஆனந்தஸ்வாமியென்ற பெயரை
யுடைய மகானைச்சந்தித்து மானஸபூஜைகளை வந்தித்துக் கொண்டு
புத்திக்கிரமமான இம் மணிமுத்தாநதியிற் கண்டானந்தப்பட்ட அதி
சயங்களியாவு மகான் புலப்படவுணர்த்தியும் பரவசப்பட்டதத்
தனைநோக்கி இவைகளைக் கேட்ட மகானாகிய ஆனந்தசுவாமி
யானவர் இந்நகரத்தினது மணிமுத்தாநதியினுடைய மகான்மியத்தை
கதையாக அத்தனுக்குக் கூறுகின்றார். ஓ பிராமணோ
த்தமனே கேட்பாயாக. நீயடைந்து விடபுற்றுவந்த நகரமோ
இராஜேந்திர கல்பகாலத்திற்கு முன் இயக்கர்கோனாகிய குபேரன்
அசுரசம்ஹார நிமித்தியமாக அவ்வாரண்யமானதில் வாந்தகம் அல்ல
ச்சிராகூரனென்ற அசுரனை சம்ஹரித்ததும் அவ்வனத்தை விஸ்வக்
ருனுக்கு உத்தரவுசெய்து விஸ்தீரணமான சகலவைபவங்களுடை
ய பட்டினமாகச் சிருஷ்டிசெய்ததும் அந்நகரிற் சிலநாட் குபே
ரன் சமஸ்த தேவாலய பிராலய பிரதிஷ்டைபண்ணியதும் அநற்
குப்பின் அநேக மனுமக்களிங்களாண்டதும் பிற்பாடு மனுவர
சர்களாலாண்டுவருங்கால் இப்போது நீ யிறங்கிய சோலையாகிய
அமுதபுட்கரணிகருக்காய் விளங்குநதிக்கு மேற்றிசையில் ஸ்ரீமத்
பராசமகாரிஷியானவர் தனக்குத் தேவவுலகிற்கிடைத்த அமு
தத்தை அந்த தடாகத்தில் பதனம்பண்ணிவைத்துப்போட்டு நிஷ்
டைகூடினபடியாலதற்கு அமுதபுட்கரணியென நாமமுண்டாகி
னதும் அந்த அமுதமிருப்பதுணர்ந்து அநேகமான ரிஷிகளுந்
தபோநிஷ்டர்களும் வந்து தபசுசெய்துகொண்டிருக்கின்ற அன்புக்
கிரங்கி யின்பத்தோடு உமாபதி சகிதராகிய சிவபெருமான் ரிஷ
பவாகனரூடராய் அமுர்தபுட்கரணியின் உத்தரபாகமா யிறங்கி
அச்சோலையின் விநோதங்களையும் போனார் கண்மகிமையையுமுணர்
ந்த உமாதேவி அந்நதியொன்று வேண்டுமென. முத்தாபரணத்

தாலுற்பத்தியானது மணிமுத்தநதியெனப் பெயர். உமாபதி
இறங்கிய ஸ்தானமே யெப்போதும் சிவலிங்கமாகவிளங்கும். அந்
நதியின் பக்ஷிமபாகத்தில் வாலகில்ய மகாரிஷியாற் பூஜிக்கப்
பட்ட நீலமேகப்பெருமாளும் அதன் சமீபத்தில் சிங்கப்பெருமாளு
மாக இரண்டு திவ்ய விஷ்ணுஸ்தலங்களுமுளதுந்தவிர அந்நக
ரத்திலே வேதத்துக்கு வித்தாயும் மறைபுக்கோர்முத்தாயும் விளங்
கும். விப்பிரசிரோஷ்டனான வித்திந்திரபுத்திரனாகிய வீராகவேந்திர
னெனும்வேதியன் வாரணாசியடைந்து ஆங்குவோர் விஷ்ணு அமு
சமாயும் வேதவியாசனைப்போற் சொருபமுடைய பகவோத்தமனா
கிய விஜேந்திரனெனுநாமகரணமுடைய ஆத்மஞானியிடமணுகி
வெகுநாள்பரியந்தங் கைங்கரியாதிகள்செ
வீராகவேந்திர ஸ்வாமியைநோக்கி அப்பா நீவந்தும் அதிககாலமா
னதே புனதுப்திக்கேகிசுகியாய்வாழ்க்கடவாயென்று பகவோத்தம
னனவர்சொல்ல வீராகவேந்திரஸ்வாமியு மவ்வசனத்திற்கிணங்கா
மல் இப்பாத தரிசனங்கண்ட அடிமைக்கு வேறுவித வாழ்வு தாழ்வு
வேண்டேனென. அநேகவித ஸ்தோத்திரங்களாற்கூற அப்படிக்கல
து நீர் சிலகாட்பதிவாசியாகவேயிருந்து வாவேண்டுமென. குரு
வாக்கியங்கடவாமல் சம்மதித்தவராய் அடிமையோ வயோதிக கால
மானதால் இவ்வாரணாசியிலிருந்தெப்படிக்குபோவேன் யென்பதிக்
கென்று வினவ பகவோத்மானவர் அப்பா நீயோ யெனக்கு வெ
குநாட் பணிவிடை செய்தமையால் அப்பதியிற் சென்றும் யெப்
போது என்னை நீ தியானிப்பையோ அத்தருணமெலாம கருடரூப
மாய் வந்து தரிசனமளிப்பேனென்றும் நீயும் நடக்கவேண்டாம்
இந்த நதியிற்போய் மூழ்குநீ யெழுந்தவிடம் ஒன்பதியாயிருக்
கும் கரையேறினவுடன் நானு முன் சொன்னபடி கருடனாகவந்
து யெந்தஸ்தானத்தி லுட்காருவேனு அதிற் சமாதி யண்டபமு
மமைத்து நீயுஞ் சிலநாள் பதியுடன் வாழ்ந்து யெனக் கெதிரில்
நீயும் சமாதியாய் நித்ய தரிசனத்துடன் விஷ்ணு அம்சமாய் ஆ
ச்சந்திரார்க்கமா விளங்கி வருவாயென்றபடியே வீராகவேந்திரஸ்
வாமியும் அவ்விடை பெற்றவுடன் வாரணாசி தீர்த்தத்தில் மூழ்கி
ய அளவில் இரண்டு கடிகைக்குள்ளாகவே அந்நகர மணிமுத்தநதி
யில் அமுதபுட்கரணிக்கு மேற்பாகமா யெழுந்தருளினார். யெழு
ந்து கரையிற் சென்றவுடன் ஸ்ரீயந்நாராயண சொரூப பகவோத்

மமூர்த்தியும் கருடேந்திரனாக வந்து மணிமுத்தாநதி தெக்ஷணபாகம் புஷ்பம்மேல் விளங்கித் தரிசனமருளினர். இராகவேந்திர ஸ்வாமியு அத்தரிசனங் கண்டவுடன் மோக்ஷார்த்த காருண்ய சாயுச்சிய முத்தராயினர். பகவோத்தம நாராயண மூர்த்தமே மணிமுத்தாநதி தெக்ஷணபாகம் யெழுந்தருளியபடியால் அந்நதிக்குள்ளாகவே தெக்ஷணபாகம் உத்தம்ம உத்தாயாக மத்திபமென்னப் படுவதுணர்ந்த அங்ககாரதிபதிகளுமான பற்பல வரசர்களாலே அந்த மணிமுத்தாநதிக்கு கிழமேல் இந்துசடிகைதூரம்வரையிலும் பூசைமண்டபங்களும் ஸ்நானப்படித்துறைகளும் யெக்யாதிகிரியா மடங்களும் போசனச்சாலைகளும் மஹோர்ச்சவாதிகட்கு திர்த்த [illegible] பங்களும் மகாவேள்வி யெக்யச்சாலைகளு [illegible] மோக்ஷா[illegible]தகாமியசித்திகளு[illegible] உண்டாகும்படிக்கு உமாபதி பரமேச்சுரன் வரப்பிரசாதத்தாலுண்டான மணிமுத்தாநதியில் ஓ பிராமணோத்தமனான தத்தசிரேஷ்டனே! நீ யிறங்கியிருந்து அந்நதியின் தெக்ஷணபாகமானபடியால் அங்கபாத்திரத்துள்ள அஸ்திமகாபரிமளமான மல்லிகாபுட்பமாகயிருந்து இன்னும் யுகதர்மங்களுக்குத் தக்கபடியே போடும் அஸ்திகள் புட்பநிறங்குன்றாத மணிகளாயும் சிலநாட்சென்றபின் அந்நிறப்பளிங்காயும் பிறபாடுள்ளவர்கள் செயலுக்குத்தக்க வெண்மையானசிலைகளாகவும் காணப்படுமென்று ஆத்மநாதஸ்வாமிகளால் தத்தோத்தமனுக்குச் சொல்லியும் பிதாவின் சொற்கடவாது செல்லென வுத்திரவருள தத்தனும் விடைபெற்று வாரணாசியடைந்து புரோகிதாண்முகமாய் சகலதான சங்கற்பாதிகணடாத்தி அங்கபாத்திரத்தை திறந்துபார்க்கவே முன்னஸ்தியாகவேகண்டு சாஞ்சல்யமடைந்தவனு ஓஹோ இவ்வாரணாசியினும் மகிமைதங்கிய மணிமுத்தாநதியென்றுணராதேயானோம். ஆனால் நம்பிதாவுக்கு அந்நதியின் விசேஷமறிந்தாற்றானே நமக்குரைப்பர். ஆகையால் யாம் அம்மணிமுத்தாநதியிற் சேற்பதேதிண்ணமென்று பழயபடிக்கு அவ்வங்கம்பாத்திரத்துள்ளடக்கிவைத்துஇந்த மணிமுத்தாநதிக்கு வந்து பிராமணசிரேஷ்டனாகிய புரோகிதமுகமாய் யெக்ஞாதி ஓமசங்கற்பங்களை வழுவிலாது நடாத்தியும் நதியில் அங்கஸ்தாபனம செய்தும், பார்ப்பளவில் முன்போலுள்ள சுகந்தமலராகவேகண்டு நதியிற் சமர்ப்பித்து ஆனந்தபுளகாங்கிதனாகி யின்னும் தனது

வம்சத்திற் றென்புல மடைந்தோர்கட்கும் இரணியசார்த்தரா வுன்னி நடாத்தினது யெப்படியெனிற் பகீரதனாற் சகரனுள்பத மடைதல்போலவும் செய்வித்து தானும் அந்நகரவாசியாகவேயி ருந்து சந்யாச ஆச்சிரமத்துடனே சருவசாம்பிராஜ்ய மோக்ஷகா ரணமான சாயுச்சியபதத்தையு மடைந்தனனென்று சூதபுராணிகர் சௌனகாதி மகாரிஷிகளுக்கு சொல்லினார்.

மணிமுத்தநதிச்சருக்க முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

நான்காவது.

# அசுரான்வதைச்சருக்கம்.

எழுசீரடி ஆசிரியவிருத்தம்.

அதியுணர்சூதமுனிவனைச் சௌனகாதிகணோக்கியுட்களிந்து | முன்
பதிசிவகதையை யமுதமாய்ச்செவிக்குப் பலனுறவூட்டினீதன்
மதியிலாவசுரானிமிசையும் பாசர்மாதவவியப்புறன்குணர்த்து [ரோ
முதியவாவெனப்பத மலரிணையவர்கண் முடியுறப்பணிந்துநின்றனை

இவ்வாறிறைஞ்சி பக்திசிரத்தையோடு விருப்புற்று இச்சரி தையைக் கேட்க விசுவாசிக்கின்ற சௌனகாதி மகாரிஷிகளைநோ க்கி ஸ்ரீமத் வேதவியாச பகவான் மாணாக்கராகிய சூதமகா முனிவ ரானவர் பின்பு நடந்த வரலாற்றைக் கூறத்தொடங்கினார். ஓ சௌ னகாதி மகாரிஷிகளே கேட்பீராக. மேற்சொல்லிய தஞ்சன் தாரு கவலனென்ற சோதரராகிய இராக்ஷதர்களோ இந்நகரத்தின் அ முதபுட்கரணி மணிமுத்தநதியைச் சூழ்ந்த அலங்காரச்சோலையின் பக்கத்திலுள்ள ஆரண்யங்களிற் சஞ்சரித்துப் பற்பல ஜீவவதைசெ ய்து உதரபூரண ஆகாராதிகளைச் செய்துகொண்டும் சந்தியாகால மானவுடனே இம்மணிமுத்தநதியிலும் அடுத்த ஜீவகாருணிகலந்த அமுதபுட்கரணியிலும் வந்து பருத்த வுதர மிகுத்துறக்கொண்ட மட்டிலும் இத்தீர்த்தங்களையும் பானம்பண்ணுவார்கள் இப்படிக்கு சிலநாள் வரையிலு மிசசோலையிலுள்ள மனு மிருகம் பக்ஷிகளின்

மாமிஷ பக்ஷணங்கள் செய்தும் அமிர்தங்கலந்த தீர்த்தத்தையும் மாநதி ஜலத்தையும் புசித்துவந்ததால் வெகுநாளலைந்த தேக இளைப்பு நீங்கியும் துவாபரயுகத்திலுள்ள இரணியாக்ஷதாள் பத்மாக்ஷரனவர்களைப்போலும் பதின்மடங்குள்ள புயபலபராக்கிரம அட்டகாசத்துடன் அண்டபிண்ட சராசரங்கள் யாவும் குலுங்கும்படியாகக் கெர்ச்சனைகளும், விடுகின்ற நெடுமூச்சினுற் சிங்காரச்சோலையிலுள்ள சர்வ விருக்ஷங்களும் யுகசண்ட மாருதம்போலச் சுழற்றி துணர்கணிறம்பிய பணர்கள்பீறிச்சாயவும் மிருகங்கள் யாவும் முன்னும் பின்னுமோட சக்தியற்றதாய்க் கீழேவிழுந்து சுழற்றி பூமியிலும் வனத்திலு மடிபட்டு மூர்ச்சையாகவும் பக்ஷிகளெல்லாம் பெருங்காற்றி லடிபட்டதாய் வனத்தின் செடி கொடிகளிற் சுழற்றிச் சிக்கிக்கொள்ளவும் இவர்கள் விடுகின்ற எக்களிப்பான ஏப்பங்களோ கோடைகாலக் கொடூர யிடிகள்போற் கிடுகிடென அண்ட முகடுக ளுடையும்படியான பேரொலி சப்தத்தினுல் பக்கத்திலுள்ள பெரிய இந்நகரத்தின் மனுக்கள் யாவுந் திகிலிட்டு, செவியடைபட்டு, மாடமாளிகை யுப்பரிக்கை கோபுரங்கள் ஆஸ்தான மண்டப மச்சுகள் தாரிசுகளுடைபட்டு, வெளியிற்புறப்படக் காலுகள் நடையிட்டு, அங்கங்கே யாவரு முறையிட்டு, சிசுக்கள் பசுக்கள் இவைகளை விட்டிற் சிறையிட்டு நகரத்தெலங்கும் பறையிட்டு வெளியிற் புறப்படாதிர்கள் இயாதோ உகாந்தகாலமான விபரீத நேரிட்டிருப்பது இப்போது சிலநாளாக யிப்படிக் கொடூர குமுறலுண்டாவதுந்தவிர, வெளியிற்போகும் பசு சிசு மனுமுதலாகிய ஜீவர்களைத் திரும்பவரக்காணுமே என்னெ ஆச்சரியம் இப்படிச் செய்வது பூதகணங்களோ அல்லது பிர்ம்ம ராக்ஷஸர்களோ காளி சூளிகளோவென்று இராப்பகல் வெளிப்படாமல் துக்கசாகரத்தின் மூழ்கினவர்களாக கலக்கத்தோடு துலக்கமில்லாமல் நகரின்றலக்கடை யறியாதிருக்க இந்த இராக்ஷதர்களோ சாம்பரிமாய்கையுடைய மாயாபிகளாகையால் இராபகல் மத்தியானங்களிற் இந்நகரத்தின் பிரஜைகளைப் பக்ஷணிப்பார்கள். அடுத்த சமிவனமுதலாகிய ஆரண்யஞ் சோலைகளில் மிருகம் பக்ஷி முதலாகிய பல ஜெந்துக்களையும் பக்ஷணமாயுட்கொண்ட விடாய்தீர பருகுதற்கு சந்தியாகாலத்தில் அமுதபுட்கரணி நதிக்கரைக்கும் வருவார்களாம். யுகாந்த இராத்திரி மத்திய சாலங்களிற் பிரசண்ட சப்த

மேக மொன்றாகிய மருட்போது மிருண்ட தேகத்தோடுங்கூடிய இராக்ஷதர்கள் அவர்களின் உருப்புகளின் உன்னதமோ அகண்ட அண்ட கடாகங்களையுமுட்டி அப்புரத்தையும் மெட்டும் பருத்த பருவதங்களுக்குச் சமானமாகிய சிரங்களும் மும்மதங்களைச் சொரியுங் கிம்புரிக் கோட்டுகளையுடைய யானையை இரண்டு துண்டா யுள்ளடக்கி அசையுற்றருந்தும் அண்ணமும் இராவண ரோமங்களுக் கிணையாகிய வக்கிரகோர தந்தங்களும் சிறிய மலைகளை மாங்கனிபோற் உள்ளங்கைக்குளடக்கிய கிரங்களும் பருவதத்திற் கிணையான புயங்களும் சப்தசாகரங்களிலுள்ள நீரையும் உள்ளடக்கும்படியான உதரமும் எழுகடலையுங் குளப்படியாயெண்ணி தாண்டித் துள்ளிப்போகும்படியான கால்களும் செங்காடுபோற் சுருண்ட செம்பட்டையாகிய ரோம ரோமங்களையுமுடைய தஞ்ச தாருகாவலாமென்ற இராக்ஷதர்களோ நமக்கு இந்நகரமும் ஆரணியமும் பிதுர்பாக்கிய பூஷிதைபோற் கிடைத்ததென்ற உற்சாகத்துடன் நாம் நெடுநாளும் வசிப்பதற்குத் தக்க தலங் கிடைத்ததென்று களிப்படைந்து அழுதபுட்காரணியைச் சுற்றிப்பார்த்து வருகிறபோது ஸ்ரீமத் வேதமூர்த்தகண்ட மகாமுனிவராகிய பராசரானவர் ஆச்சிரமத்தில் இராப்பகல் மழை இடிமின்ன லின்னதென்றறியாது மோனநிஷ்டராக இருப்பதை இராக்ஷதர்கள் கண்ணுற்றார்கள். இவரது தபோமகிமை யாலொருநகத் தகாமல அக்கினிமயமாய்த் தோன்ற இஃது மென்ன பகற்சோதியாய் நிமலநிஷ்டராய் விளங்குகின்றது மென்று பலமான கற்களை மெடுத்து சோதியிற் பட வீசினின்றனர்களாம். ஸ்ரீமத் பராசரானவர் நிஷ்டை கலைந்து விழித்துப்பார்த்து ஓமாயாபிராக்ஷதரோ வந்துவிட்டார்களென்று தவத்திற்கு இடையூறு வந்ததென்று வருந்தி நான்முகப்புத்தேளாகிய பிரம்மாவை நோக்கி தியானித்தார். உடனே அம்சவாகனரூடராய் வாணி சகிதமாய் பராசரிடமெழுந்தருளிய பதுமாசனபதியை ஸ்தோத்திரம்பண்ணி இவ்வசுரர்களின் இம்சையைக்கூறினர். கூறிய பராசமகாமுனியை நோக்கி பிரமா சொல்லத் தொடங்கினர். ஓ பராசரமுனியே கேட்பீராக இந்த இராக்கதாள் பூர்வம் பாண்டுபுத்திராதிகள், துரியோதனாதிகளாற் தாரணி யிழந்து ஆரணியம் புகுந்து வசிக்குநாள் தீரவீர பராக்கிரமகாண்டப திக்கு விசய பற்குனனாகிய அர்ச்சுனன் காளகண்ட திரி

நேத்திரதாரியாகிய பரமசிவத்தின் றிருவருளைநோக்கி அரிய தவம் புரிந்து பாசுபதாஸ்திரம் பெற்றதுணர்ந்து கிரீடி தந்தையாகிய தேவேந்திரன் நிவாதகவச காலகேயர்களாகிய இராக்ஷதர்களா லுண்டாகின்ற இம்மிசையை மாற்றிக்கொள்ளும் பொருட்டாய் தநயனை கிரீடியை விமானத்தேற்றிப் பொன்னகரடைந்தும் பன்னிய உபசாரத்துடனிருத்தி தனக்குற்றவிபரீத இராக்ஷதாளுடைய விர்த்தாந்தங்களைக்கூறுகின்றான். வச்சிரபாணியாகிய கற்பகக்கா சூழ்ந்த உம்பருலகுக்கதிபதியும் அயிராவதத்தலைவனுமபுலோமிசை மணாளனுமான மகபதியானவன் புதல்வனைநோக்கி ஓ புத்திரசிகாமணியாகிய விற்குணதீர பற்குண! கேட்பாயாக எந்தநாளும் வந்து போராடும் தந்திரக்கொடிய இராக்ஷதாள் இயாவரென்றாலோ பண்டு திரிபுராதியென்ன மும்மதில்களாற் சூழ்ந்த பசுந்த கோட்டைகளை யுடையவர்கள்யென்ற முப்புராதிகள் இவர்களாற் சர்வத்திர தேவர்களுக்கும் யிடையூறுசெய்த கொடியரை சம்ஹரிக்க கங்காளபிக்ஷாண்டரான சாம்பமூர்த்தி யெத்தனித்து யெம்முதல் இதர தேவதைகளை யெல்லாம் இரதகஜதுரக பதாதிப்படையாக்கி நின்றும் தொகுப்பினிலடங்காப் பகைப்புரவரக்கரை நகைத்தெரித்திடுநாளில் பஸ்மீகரமான இராக்கதப் பிரளயத்தில் இரண்டு அசுரஸ்திரீயும் மூன்று வீரர்களும் விடுபட்டவர்களா யுயிர்பெற்று பின்பு கபடநாடக சூத்திரவதாரி மாயாவினோத ஸ்ரீமந் நாராயணனை நோக்கி பன்னிரண்டாயிரவருடம் மகா அரிதாகிய தவம்புரிய, அந்தவத்துக்கிரங்கிவந்த விஷ்டுணுவால் அநேக வரங்களையும் அண்டபிண்டங்களிலில்லாமல் அந்தரத்தில் இரணியக்கோட்டையும் எப்படைகளினாலுந் தேவர்களுஞ் செயிக்கக்கூடாத வரமும் அதிவிர்த்தியும அனுக்கிரகம்பண்ணிய மகத்துவத்தால் விகவிர்த்தியாகியும் மாயாசொரூபிகளாயும் வெகுநாளா இந்நாடாகிய பொன்னாட்டில் வந்து போர்செய்து மின்னார்களை யெடுத்து சின்னாபின்னப்பட யெம்முதற்றேவர்களையும் இயமன்முதல் திக்குப்பாலர்களையும் வென்னிடும்படி செய்கின்றானென்றும் யிவர்களோ பிரமச்சோதி சாட்சாத் சிவபிரானளித்தபாசுபதாஸ்திரமன்றி மற்றதாலழியார்களென்றும் சொல்லக்கேட்டு அர்ச்சுனனாகிய காண்டிபநாராயண நண்பனும் உச்சாகத்துடன் மகபதியாகிய தந்தையினது தேர்பரி சாரதியும் பெற்று பிதா விடைவாங்கி யுத்த

சன்னத்தரா ஆயுதபாணியாய்ச் சென்று இரணியபுரத்தை யடு
த்து, இராக்ஷதாளைக் கடுத்து, காண்டிபங்கையி லெடுத்து தனுவி
ற் சரங்களைத் தொடுத்து, உக்கிரகோபமாய் விடுத்து, அசுராரு
நொந்து நடுத்து யுகாந்த பிரளயங்களைப்போல கொதித்து, நி
ன்று பன்னிரண்டு நாளிராப்பகலாய் போர்புரிந்ததில் அசுரா
ள் பலதரமிறந்தும் பலதரம் ஜனித்ததும் பற்குனன் கண்டுருந்
து ஆஹா யிதென்ன விபரீதமென்று கறைமிடற்றண்ணலாகிய
பசுபதியளித்த பாசுபதாஸ்திரத்தால் இருகலத்துற்ற நிவாதகவச
காலகேயர்களை அந்நாட்டகித்த ஈசனது வண்மையைப்போல
சின்னோத்துள்ளாய்ப் பின்னமடைந்தகாலத்தில் அவ்வசுரர்களில்
வீரசேனன், வல்லன், தஞ்சன், தாருகனென்ற நான்கு இராக்ஷ
தாள் இப்பூமியில் வீழ்ந்ததில் ஈசனது பாசுபதாஸ்திரம் பட்டதனா
ல் அரியளித்த வரத்தின் பலமுங் குறைபட்டவர்களாகி உத்
தரபதியாகிய தனதனால் வீரசேனன் இவ்வாரண்யத்தில் முடிந்தா
ன் ஒழிய இன்னும் மூன்று இராக்ஷதாளுளது அப்பேர்ப்பட்ட
மகா பலமான மாயாவியாகிய கொடிய ராக்ஷதர்களி லுள்ளவர்களா
க்கும் இந்த அசுராளும். ஆனல் இவர்களோ முன் வீரங்குறைந்
திருந்தாலும் இப்போது இந்தச் சோலையிலுள்ள தடாகத்தில்நம்
மாலொழித்திருக்கப்பட்ட சமணியகாணிதங்கியதேவதா அமுர்தங்
கலந்த தீர்த்தபானமும் செய்திருக்கின்றார்கள். இவர்களின் புயப
லத்தால் இப்போது திரிமூர்த்திகளின்றி பஞ்சசத்தியுமின்றிமற்ற
*இதர தேவர்களையும் சுத்தவீரர்களையும் யுத்தம்பண்ண மதிப்பார்க
ளோ ஆகையால் சிருஷ்டிக்கர்த்தா வுலகிற் சூரனுடன் மனுவின்
பொருட்டா யுத்தம்பண்ணக்கூடாது. ஆகிலும் பஞ்ச சத்திகளி
ற் கிரியாசத்தியை நோக்கி தவசுபண்ணினால் அசுரர்கள் வாதை நீங்
கி தவசு நிறைவேறுமென்று பூமகனாகிய கலைமகடலைவனும் பிரம
லோகத்திற்கு அம்சாபதியா யெழுந்தருளினார். பின்பு ஸ்ரீமத்
பராசமுனிவரானவர் வினைத்துணையாகவிளங்கும் கிரியாசத்தியை
நோக்கி காருண்யமாகத் தியானித்தவுடனே ஈரொண்புயஞ் சோடச
கரத்துடனிலங்கிய பற்பலபடையாவன திரிசூலம், பிண்டிபாலம்,
தோமரம், வாள், வேல், கதாயுதம், வல்லயம, ஈட்டி, பரிசை, தம
ருகம், பாசம், மழுப்படைதனு முத்கரமுசண்டி பிராசபரிசூல கதா
யுதங்களைத் தரித்தவளாக ஸ்ரீமத்பராசரிட நிஷ்டாசமுகத்திற் பிர

சன்னமாக வெதிரில்வந்துநிற்க தபோநிஷ்டராகிய பராசமுனியான வர் மானஸ்யமாக சாட்சாத் சத்தியை சிந்தனையோடு வந்தனைபுரிந்து ஸ்தோத்தரிக்கின்றார். ஏ ! அந்தரி, கௌரி, முக்கண்ணி, கௌமாரி, சூலி, கபாலி, துரந்தரி, நிரந்தரி, யம்பிகா, அமலே, வாலாம்பிகை, சுந்தரி. புரந்தகி, அருணை, கிரணஞ்சாலாம், ரஞ்சிகாம், சாவகாசமுத்திரீத செபவடிகாம, புத்தகாம் பீதிஅஸ்தாம், இதரகர பிராட்டியாம், புவர்லோகாம்கல்க்காராம், நிவவதுஇர்திபாலாம், நித்யகல்யாணசீலாம். சியாமாந்திரிநேத்திராந், திரிபூஷாம், திரியம்பிகாம், சௌபாபசௌபஸ்திதகுஞ்சிதாங், ஸ்ரீயும்சல்யோர்ப்பலாம் நவபிசுததபூஷணாட்டியாம், லம்பாணியாம், அஸ்தாம், பரமேஸ்வரீ, யந்தாம், சகுங்குங்குமவிலேபனும், மணிகசம்பகஸ்கூரிகாம், ஸ்மிதந்த அஸ்திநேதட்சணும், சசாமசாபபாசாங்குசாம், அசேஷசனமோகினிம் அருணமாலிய பூஷாம்பராம், ஏ ! மாதங்கியென்று ஸ்மரித்து சத்தியைநோக்கித் தனக்குற்ற இராட்சதர்களிடை யூறைக்கூறினார். கேட்ட சத்தியானவள் உக்கிரகோரத்துடனே ஆற்பரித்து விஸ்வரூபத்துடன் கெற்சித்து ஓ மாதவசிரேஷ்டரே ! உம்முடைய தவசுக்கு விக்கினம்வாராமல் அவ்வசுரர்களை நாசம்பண்ணி அடுத்த இந்நகரத்தாருடைய இம்சையையும் மாற்றுகிறேனென்று கோரரூபமாகிய மாயாபி அசுரனைக் கியானதிஷ்டியாலிருக்கின்ற ஸ்தானமறிந்து ஓகோ இராக்ஷதப்பொட்டிமக்களா ! அடடா வெளியிற் புறப்படடா. யுத்தத்திற்றெடடா. மாயரூபத்தைவிடடா. மகாதிருடாவென்று கோரகூக்குரலிட இராக்ஷதர் வெளியிற் புறப்பட இவர்களுடை கோரரூபத்தைப்பார்த்து வீராவேசத்துடனே நின்றுசத்தியானவள் கோடையிடிகளைப்போற் கர்ச்சித்து யுகாந்தபிரளய மின்னல்வெட்டுப்போலே வில்லைவளைத்து நாணிப்பிகிர்ந்து குணத்தொனிசெய்து அஸ்திரசஸ்திர திரிசூலம், வேல், அம்புகளை வருஷாகாலம்போற்சாமாரியாய்சொரிய, அசுரர்கள் தேகநிறைய, அவையவங்கள் குறைய, அவர்களும் அந்தரத்தின் மறையுடபடி நின்று, மகிடாசூரனைச் சங்காரம்பண்ணின ஆங்காரசத்தியான வள் ரீங்காரமயமாகி நீங்கள் சாங்காலயானது, வாங்கடா நீங்கள் சூரரேயென்று ராக்ஷதர்கள் வெடுத்த மாய்கையைப்போலே பலவிதரூபங்களையெடுத்து, அவர்களைக்கண்டுபிடித்து பாணங்களை விடுத்துக் குரூரமாய் நிற்கும் சத்தியின் பாணங்களை லக்ஷியமில

லாமல்த்தடுத்து இராக்ஷதர்கள் அண்டமுகடையும்படியாய்க் கெற்சித்து பருக்க விருக்ஷங்களை வேரோடு பிடுங்கித், திரண்மையாய்வந்து நெருங்கி, மோதுவதெப்படியெனில், விடகாரிகளால் நச்சரவுங்கடிக்குப் பச்சிலைவீசியதுபோலு மிருப்பதாகப் பாரபணை நினைத்து, கோரமாய் நகைத்து, சத்தியாகிய முத்திரிமுகபாணத்தை யெடுத்து, அபிமந்திரித்து வில்லினிற்றொடுக்க அவர்களுமுடைந்த தேகங்களை சல்லடைக்கண்களைப்போலாய்த் துளைக்க இராக்ஷதர்கள் இரத்தச்சோரிகளைக் கக்கிகொண்டு மூர்ச்சையடைந்தார்கள். இதைக்கண்ட சத்தியானவள் இராக்ஷதர்கள் ஒழிந்தார்களென்று, சந்தோஷித்தும் ஆனால் மாயாவிகளாச்சேயென்று சந்தேகித்தும், இராக்ஷதர்களுக்கு இராத்திரிகாலங்களில் வலுவிர்த்தியாச்சேயென்று சத்தியானவள் மறைந்திருந்தனள். அப்போது சந்தியாகாலமனவுடன் சோலையினது யிழுந்தென்றல் சோபிதமாய்வீசிய அளவில இராக்ஷதாள் உயிற்புற்று சிரஞ்ஜீவகரணிதங்கிய அமுர்தபுட்கரணியில்வந்து யுத்தத்தால் இளைப்புற்றகளைகணீங்கப் புட்கரணியில் அமுர்தங்கலந்திருக்குந் தீர்த்தத்தையும் பருக்கு வயிறுகள் நிறம்பப்புசித்து முன்போலும் வலுமையுண்டாகி நம்முடன் யுத்தம் பண்ணினவன் யெங்கேயெங்கே என்று தேடச் சத்தியானவள் கண்டு ஒகோ இதென்ன ஆச்சரியமென்று சதியான முன் செய்த யுத்தத்தினின்றும் யெண்மணங்கதிகமாயுள்ள கொடியபாணங்களினாலும் சத்தி, கதை, வேல், வாள், தோமரம், பிண்டிபாலம், சக்கரம் இவைகளினால் நவநாள்வரையிலும் போர்புரிந்து முன்சொல்லியபடியே தினம் தினம் உயிற்பித்து இராக்ஷதர்கள் மடியாமலிருக்கச் சத்தியானவள் கண்டு மிகவும் மனம்புழுங்கி இரண்டுகண்களினாலும் அக்கினிப்பொரிகள்சிதற குரூரகோபத்தோடு பாராசரிடமணுகி ஓ தவசிரேஷ்டரே! இந்த இராக்ஷதர்கள் நவநாளாக நான் செய்த வீரயுத்தங்களினாலும் மடிந்து மடிந்து பிரதினமும் யெழுந்து ஒருநாட்கொருநாள் பலவிர்த்தியாய்ப் போர்புரிவதுபோலிப்படிச் சூரர்களை பார்த்ததிலேயென்று சொல்லக்கேட்டு பாராசமகாமுனியும் பிரமாவினால் கேழ்விப்பட்ட இராக்ஷதாளுற்பத்தியை யுணர்ந்தியும் பூர்வம் ஸ்ரீ விஷ்ணுவின் வரப்பிரசாதப்பலத்தின் மாயாசொருபிகளென்றும் சந்தியோடுவினைபு, இவர்கள் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியை நோக்கி தியானிக்க உட

னே வைகுந்தவாசரும் ஸ்ரீ புருஷோத்தம பரந்தாம ஜீவகாருண்ய சீலரும் அச்சுதாநந்த முகுந்த வாசுதேவராகிய வெம்பெருமான் கருடவாகனரூடராய் சங்குசக்கர பீதாம்பரதாரியாய் கிரியாசத்தியுடன் இஷ்டாதுரந்தரராய் விளங்கும் பராசமகாமுனிவரிடம் வெழுந்தருளினார். இவர்களும கண்டு மானஸ்யமாய் வந்தித்து ஸ்தோத்தரிக்கின்றார். ஹரி மாதவ முகுந்த ஸ்ரீ கோவிந்த வைகுந்த வரத யாதவ சிரேஷ்டா, வாசுதேவா கோபிகாரமண கேசவ வராக வாமன சொரூபா, பூதலமளந்தவா மருவுமுப்புவனமும் பூத்தவா புவிகாத்தவா, பூந்துளபசேகர, பராபரகுணாகரா, பூம்பொன்பீதாம்பரபுயா, சீதிலாக்கண்ணுவர் பிருகு அத்திரிவியாத தேவரிஷி முனிகடோர்ந்து, செப்ப ஒப்பிய பரத்துவாநதனே யடியர் தீங்கறச் செய்போதனே, சீதரா தாமோதரா கருடகேதனா சேவைதந்தெனையாண்டிடும் ஸ்ரீ பூண்டரீகவரதா தீனதயாளுவே முரஹரி தயாநிதேயென்று பலவாறாய் ஸ்தோத்திரம்பண்ணியுந் தமக்குள்ள இராக்ஷதர்கள் கொடிய செயல்களைச் சொல்லியுநின்றனர். ஸ்ரீ பகவானும் புட்கரணியின் அமுதத்தை மாயமாய்க்கிரகித்து முனிவரை நோக்கி, ஓ அருந்தவமுனியே வருந்திடவேண்டாம், பொருந்தி இவ்வசுரரை மடிந்திடச்செய்வோம் என்று சத்தியைநோக்கினர். மகாவீரசத்தியானவள் சாமளையாகி பகவானதுசக்கரத்துள் அயிக்கியமாயினள். காயாமலர் வண்ணனாகிய, மாயாவிநோதனும் கோதண்டபாணியாய் முன்பு, கம்சன் சகடாசூரன் முதலாகிய பராக்கிரம அசுரர்களை யெல்லாம் வதம்பண்ணுங்காலத்திலுண்டான உக்கிரகோரம்போற்சினந்து, நீலவிழிகள்சிவந்து, மாயாவிகளான அசுரர்களைமுனிந்து, முனிவரர்டுக்கணீங்க, இராக்ஷதர்கள் திடுக்கிட்டேங்கப், பகவான் பெருஞ்சினமோங்க, தனது சங்கத்தொனியை முழக்கினின்றார். இப்படி ஸ்ரீமாயனு நிற்குமளவில், அசுரர்களும் எம்பெருமானுடைய சங்கத்தொனியின் ஆர்ப்பாரமறிந்து ஓகோ அன்று நம்முதியோர்கள் தவத்துக்கிரங்கி வரமளித்த விஷ்ணுவானவர் இன்று நம்முடைய பலத்தைக்கருதி உயிரழிக்க வந்தாரோ, ஆஹா புஜபலவீரர்களாகிய சோதரர்களேயாம்யென்செய்வோம், நாம்வினைக, முனிவனைக்கற்கொண்டெறிய, யெக்காளியோ பந்துவிற்கணைசொரிய, நாமுமற்களைப்புரிய, இப்போது மாயனது சக்கரதாலழிய நேரிட்டதோ ஆஹா நம்மிடமாயை யெல்லாம்

அரியிடஞ்செல்லாதே நம்மையுங்கொல்லாதே விடுவானோ மாயன்
இதற்கென்ன செய்வோமென்று துக்கித்து, மனம் வெட்கித்து
மனதுகலங்கி, வனத்திற்பதுங்கி, வன்போற்கொதுங்கி, கண்ணீர்
கலங்கி, நீலமேக சாமளவண்ணத்தோடும் பிரகாசிக்கின்ற ஸ்ரீபக
வானிடஞ்சென்றுசரணமடைந்துநின்றனர். ஏனெனில் நாம் ஸ்
தோத்திரம்பண்ணிப் பகவானது கோரகோபத்தைமாற்றி யினி
ய வசனங்களைமூட்டி, நம்மிட சாம்பரிமாய்கையைக்காட்டி, யோடி
விடுவோமென்ற வெண்ணங் கைக்கொண்டவர்களாநின்று பகவா
னை நோக்கி, ஸ்ரீஹரிமாதவா, முகுந்தா, கோவிந்தா, வைகுண்ட
வாசகா என்று பூர்வத்தில் எங்கண்முன்னோர்களுடைய தவத்திற்
கிரங்கி வரமளிக்கவந்து தரிசனங்கொடுத்தாற்போல் இப்போது
எங்களுடைய பவத்துக்குக் காரணமாகவந்து நேரில் தரிசனம்
கிடைத்ததே யெங்கள் ஜன்மசாபல்யமானோம். ஆனால், யாங்க
ளிவ்வாரண்யத்தில்வந்தும் அநேக நரர்மிருகமுதலிய பலசெந்துக்
களையும் பக்ஷித்ததுமன்னியில் மஹா முனிவருள்ளமு நோகப்
பண்ணின கொடியதுஷ்டனாகிய யெங்களை தேவரீர் சக்கரத்தால்
சிரகண்டனம்செய்வது நிட்சயமானாலும் அடியேங்கள் வேண்டிய
வரமளித்து யெங்களுயிரழிக்கவேணும் பகவானேயென்று பரிதா
பத்தோடு இராக்ஷதாள் வேண்டிநிற்க தீனதயாளுவானதால்இவர்
கள் இராக்ஷதர்களாயினு மிப்படிக்கியம்பியவார்த்தைக் கிரங்கி ஆ
ஹா வ அசுரர்களே! உங்களுக்கு வேண்டிய வரமியாது வினவ
வேண்டுமென்ற உடன் இராக்ஷதாளும ஓ ஸ்ரீமந்நாராயணமூர்த்தி
யே! எங்களுக்கு வேண்டும் வரம இயாதென்றால் நாங்கள் இந்த
ஆரண்யத்தையும் அடுத்திடுநகரையும் சதாகாலமும் நாங்கள் வசி
க்கவும, அதிலுள்ள பிரசைகளைப் புசிக்கவும், சாஸ்விதமாயெண்ணி
யிருந்தபடியால் இப்போது பகவானால் யெங்களாவி அழிந்தாலும
யெங்கள் நாமகரணம் யெப்பவுமழியாவண்ணமா விளங்குமபடி
யாயும் பகவானது சுயரூபதரிசனமும் யித்தலத்தில் அருளவேண்
டும்யென்றபடியே ஸ்ரீபகவானும் மணிமகுடங்கொண்ட நீலமேகப்
பெருமானுக் கருணைமுகூர்த்தமா நிற்கவே, இராக்ஷதர்களிதுதான்
நல்லசமயமென்று தங்கள் தங்கள் யெண்ணப்பிரகாரம் சாம்பரிமா
யையால் வலாசூரனானவன் அம்சரூபமாய் ஆகாயமானான். தாரு
காசூரன் வராகரூபத்துடன் பூதலம் புகுந்தான். தஞ்சகாசு

ஞானவன் சாமரூபமாகிய பேரிருள் வடிவா யெவ்வித ஒளிமனி னும் புலப்படாவண்ணமா வருணைபாகத்திற் சென்றான் இப்படிக்காகவே திருப்பாமூர்த்தியா நின்ற ஸ்ரீ மாயாவிநோதனாகிய நீலமேகவண்ண முகுந்தனுநோக்கி ஓகோ யாம் துஷ்டநிக்கிரகம் பண்ணாமல் மாயாவிகள் ஜாலந்தோத்திரத்துள்ளானது சபலமென்று உக்கிரகோர கோபாக்கினி மூண்டு, அண்டமுலவ நீண்டு தனது திருக்கரத்தில் விளங்குபடியான சக்கரத்தை யெடுத்து உச்சாரணம் பண்ணி விடுத்து நின்றார், அப்படி விடுபட்ட சக்கரமானது காகாவென்று சுழன்று, மாயயிருள் வழியிற்சென்று, புகார்ந்த பீடிமின்னல்களை கக்கிக்கொண்டு இருள்வழியுலாவி நின்று அசுரனை யுருப்புக்கண்டது இஃதைக்கண்ட தஞ்சகாசூரன் மிகவும் பயந்து, அண்டமுகடுடையும்படியான கொடூர சப்தங்களைப்போட்டு, பேரிருள்மாயையைமீட்டு, கிகிரிவருமொலியைக்கேட்டு, நிற்குமிராசுதனிடம சக்கரமனித்தாய்ச்சென்று, அந்தாகாரமான இருள்வடிவசுரனைக் கண்டு, அவனது சிரசைக் கண்டனம் பண்ணிக்கொண்டு, க்ஷீராப்பதியிற்சென்று, ஸ்நானம்பண்ணி மீண்டு, ஸ்ரீபகவானது, திருக்கரத்தில் வந்திலங்கவே கண்டு, மற்றிரண்டு ராட்சதர்கள் சென்ற மாயகையையுமறிந்த முகுந்தனானவர் தாருகாசூரன் வராக ரூபத்துடன் பூதலந்துளைத்தேகும்பாதலவழியைக் கண்டுற்று தெட்சணபாகயாயத ஆவரமசெல்வதில் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் அன்று இரணியனுக்கெடுத்த உக்கிரகோர சிங்க ரூபத்தை யெடுத்து அவ்வழி சென்று அனையோசனை தூரம் போனவுடன் ஆங்கொழிந்திருந்த வராகரூப தாருகா சூரனுமெதிர்ப்பட நீண்ட கூர்மையான, யுகிர்களிலங்கிய கரத்தினைற்பற்றி விஸ்வரூபத்துடன் வெளியிற்கொண்டுவந்து கோரதந்தங்களினற் கூரனுடலைப்பீறி, உருப்புகளைக்கீறி, யெழுந்திடுஞ்சோரி, அகோரபெரும்வாரியாயோட, அலைகைகள்கூட, ஓரிகளுடைச் செய்து, தாருகன் பட்ட இடத்திலின்று ஆஹா மற்றொருவன் எங்கேயென்று இராக்கதன் சோரி பட்ட கேரியினுல் ஒன்றுந்தோணுமல் நரசிங்க கோர ரூபத்துடன் வ்லாசூரனைத்தேடி அத்தலத்தினின்று வருணை பாகத்தில் அனேயோசனை தூரம் ஓடி, கோர கெற்சனை செய்து நின்றார் அவ்வாரண்யத்தில் கௌதம ரிஷியால் ஓர் பெரிய முனியொன்று சிருஷ்டிக்குதனக்கு பிருக வியாபாரைகள் நேரிடாமல்

பாதுகாக்க கடவேனென்று நியமித்து ரிஷிகளை கூடியிருந்தார் அ
வ்வாரண்யத்திலின்னும் பூர்வம் மோகினி அவசரத்தில் பகபதியா
லுண்டான அரிஹர புத்திர மூர்த்தியும் தபசுபண்ணிக்கொண்டிரு
ந்தவர் இந்நரசிங்கத்தைக் கண்டு திகிலிட்டு முனியைநோக்க முனி
யுந் திடுமெனவெழுந்து கோர சிங்கமா நிற்கும் பகவானைக்கண்டு
திரும்பிக் கௌதமனிடத்திலும அரிஹர புத்திரனிடத்திலுமுரைக்க
இவர்களும் நிஷ்டைகளைந்தெழுந்து, நரசிங்கமூர்த்தியினிடம்சென்
று ஸ்ரீ நரசிங்கமூர்த்தியாகிய பகவானுக்கு சோரிவெறிநீங்கும்படி
யானவைத்திய உபசாரங்களைச்செய்திருந்தனர்கள். இஃதிங்ஙனிற்க,
ஆகாயத்தில் அம்சரூபத்துடன்சென்ற வலாசூரனைப் பூமியில் விஷ்
ணுயுத்தம் பார்த்துநின்ற தேவர்கள் இச்சூரன் பக்ஷியாய் வருவ
து கண்டு பொன்னுலகிற் சென்று குலிசபிராணாகிய வச்சிரபாணி
யிடம் நின்று, ஆஹா தேவரீரோ முன்னொழிக்க நிவாதகவச காலகே
யர்களில் விடுபட்ட நான்கு ராக்ஷதர்களுண்டே யவர்களில் பூவினி
ற் சென்ற திதிபதியாமொருவனும், ஸ்ரீ பராசரமுனியின் பொருட்
டால் ஸ்ரீ விஷ்ணுவாலிருவரும் அழிய அதில் ஒருவனிதோ நம
பதிக்கருகாய் வந்திட்டான். நாங்கள் கண்டிட்டோமென்று மகப
திமுன் முறையிட இஃதைக் கேட்டவுடன் வச்சிரபாணியாகிய
இந்திரன், தனது அயிராவதத்திலேறி வச்சிராயுதம் பற்பல படை
யுடன் யுத்தசன்னத்தனாக மற்றுந் தேவர்கள் சூழப் புறப்பட்டு
பொன்னகர்நீத்து, இந்நகர் பார்த்து, துன்னியவடசயாய் நண்ணும்
இராக்ஷதனை கண்ணுற்று சர்வதேவர்களும் பற்பல பாணங்களை
சாங்கோபசாங்கமாய்ப் பிரயோகம்பண்ணினார்கள். இஃது நோ
க்கிய வலாசூரனாகிய இராக்ஷதனானவன் ஆஹா ஈதென்ன விபரீ
தம் நம் சோதரரை புலகின்கண் ஸ்ரீமாயனானவர் அதம்பண்ணி நம
மையும, வதம்பண்ணுவதற் கெத்தனித்தரோ என்று திகிலிட்டு,
மாயாரூபத்தை வெளியிட்டு, முன் வசித்த ஆரணியத்தின்வழியா
ய் முறையிட்டு, பூமியில் விழுபட்டு, மரிவடிவெடுத்து ஓடினான்.
அப்படி யோடிய அசுரனை விடாமற் பின்சென்ற தேவர்களுடன்
குலிசப்புத்தேளாகிய இந்திரனும் அயிராவதத்துடன் உடனேவே
மரியாகிய வலாசூரனும், தன் சோதரனாகிய தஞ்சகாசூரன் சாம
ரூபமாய்நின்று விஷ்ணு சக்கரத்தா லழிபட்டிட்டதைப்பார்,
து அதில் நின்றும் தெக்ஷணபாகமாய் மானாகவோடி, குன்றாக

டர்ந்த சோலைகணிறைந்த வனத்துள் ஓர் குகைத் துவாரத்தினிடமாய்ப் புகுந்தோடவே இஃதை நோக்கிய வச்சிரபாணியாகிய விந்திரன் தனது திருக்கரத் தியக்கும் குலிசையைச் சுழற்றி மகாவுக்கிர கோபத்தோடு விடுக்கவே பூர்வம் மகா கிரிகளையெல்லாம் செக்கைகளையரிந்த வச்சிராயுதமானது விடுபட்டு அசுரனோடிய குகைத் துவாரத்திற் நீடிலென்று கடாரித்து யுகாந்த கோடைபிடியாய் குபீர்க் குபீரென அக்கினிப்பொரிகளைச் சிதறி அதல, விதல, சுதல, நிராதல, மகாதல, பாதாளபரியந்தம் ஊடுருவிப் பாய்ந்து மாயாபியான வலாசூரனையும் தகித்து, மூன்றீரிற்றோய்ந்து, மகபதியாகிய வலாரியின் கரகமலம் வந்துசேர்ந்தது. கூறிய வச்சிராயுதம் பட்டுருவிய பாரையானதில் நின்று, பாதல கங்கை பிரவாகங் கிளம்பியதைக் கண்ணுற்ற தேவர்களும் ஆச்சரியமடைந்து நிற்க, அதின் பக்கத்தில் வக்கிர தந்த உக்கிரகோர நரசிங்கரூபத்தோடு நின்ற ஸ்ரீ பகவானும் சோரி வெறியகல உபசரித்துநின்ற ஸ்ரீ அரிஹர புத்திரரும் கௌதமரிஷியும் மகாமேரு நிகரான விளங்கிய பாதுகாவல் முனியும், இன்னும் பக்கத்தினின்ற கபிலமகாரிஷியும் பூர்வம் பத்மகற்பத்தில் அவ்வாரணியத்தில் அநேககோடி இராக்ஷதர்களை யேவாகிய பாணங்களினால் வற்றியரித்த சிற்சத்தியாகிய மகா கோர செண்டிகாவென்ற காளியும் பின்னும் அவ்வாரணியத்தில நிஷ்டையிலிருந்த தபோநிதிகளும் நிற்கும் தேவகோஷ்டிகளை யறிந்தவரா யங்குற்றிலங்கவே மகபதியானவன் ஸ்ரீ நரசிங்கமாயெழுந்தருளிய பகவானைக் கண்ணுற்று ஸ்ரீ பகவானது பாதபத்மங்களை மனதிற்சிந்தித்து, இருகரத்தால் வந்தித்து, அநேகவிதமான ஸ்தோத்திரங்களாற் துதித்து, ஆனந்தபரவசமாகித் தேவர்களெல்லாங்கொண்டாடி, ஸ்ரீ பகவான் தாருகனைப்பொருதி யழித்த இரத்தவாடையாகின்ற மருட்கொண்ட வெறியை மாற்ற ஸ்ரீ பகவானிடம் வலாசூரனுடைய மாய்கையையும், அவனொழிந்த வியப்பையுமுணர்த்தி அவனைக் கொன்ற வச்சிராயுதம் பட்டுருவிய பாரையின் வழியிலுண்டான பாதாளகங்கையுங் காட்டித் தேவர்கள் நின்றார்கள். இஃதைக் கண்ணுற்ற ஸ்ரீபகவானுடன் மற்ற சர்வதேவர்கள் தபோநிதிகளாகிய ரிஷிகளும் இன்று ஆதிகாளில் அசுரர்களை யெல்லாம் வதம்பண்ணியும் ஜீவர்களி னிமிசை தீர்த்தபடியால் இத் தலத்தின்கண் ஓர் திவ்ய சிவக்ஷேத்திரம்

விளங்க வேண்டுமென்று சர்வதேவர்களும் ரிஷி தபோதனாதிகளுங்கூடி யோசித்து வச்சிரேஸ்வரர் மரகதவல்லி யென்ற சிவாலயம் பிரதிஷ்டையும் நடாத்தி சர்வதேவதைகளுங் கொண்டாடும்படியான அவ் வாரண்யத்தில் வசித்த யோகீஸ்வரர்கள் முதலானவர்களும் அவரவர் பெயரால் ஒவ்வொரு தீர்த்தங்களு முண்டுபண்ணி அவ்வச்சிர தீர்த்தமுதலாய கௌதம தீர்த்தம், அரிஹரதீர்த்தம், கபிலர்தீர்த்தம், சண்டிகா தீர்த்தங்களுமாடி இவ்வச்சிரேஸ்வரரையும் மரகதவல்லியையும் நேமுகத்தோடும் ஆதிவாரம் பூசிப்பவர்களுக்கு சர்வாபீஷ்டசித்தியுமுண்டாகி சத்ருபயமும் நாஸ்தியாமென்று வரமருளிப்பம்செய்து சர்வதேவர்களுடன் சிங்கமூர்த்தியாயிலங்கும் ஸ்ரீ விஷ்ணுவும் தேவதுந்துபி யார்ப்பரிக்க அத்தலம்விட்டுப் பிறப்பட்டு அதினின்று நான்கு குரோசதூரத்தில் உமாமகேஸ்வரியால் முத்தாபரணம் வீசியதில் நதியுண்டான ஸ்தலமாகிய தக்கன் குறிஞ்சியென்ற குன்றிடம் சென்று அந்நதியை சர்வதேவர்களும் கண்ணுற்று அம்பாள் அளித்த ஆபரணமான மணிகளின் சோதியையும் அதிலிருந்து உற்பனமாகின்ற நதியையும் இரத்னக்குன்றாகப் பிரகாசிக்கும் பன்மணி மலையையுங் கண்டானந்த பரவசத்துடன் ஸ்ரீபகவான்முதலாய இந்திராதிதேவர்களும் ரிஷிதபோதனாதிகளும் அந்நதியிற்றோய்ந்து புளகாங்கிதமாகி ஸ்ரீபகவானது கோரசிங்கரூப உக்கிரமும் அசுரனைச்செயித்த சோரிவெறியுநீங்கி பரமானந்தமேலிட்டு ஸ்ரீ கயிலைவாளியையும் அம்பிகையையும் ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு அதினின்றும் அந்நதியொழுகிய ஈசானபாகத்தூடே தேவகோஷ்டிகள் முழங்க துந்துபியார்ப்பரிக்க தேவர்கண்மலர்தூவ பிறப்பட்டு ஸ்ரீ பராசரமுனியின் ஆச்சிரம அமுர்தபுட்கரணியின் உத்தரபாகத்தில் ஓர் குரோசதூரத்தில் வந்துநின்று ஸ்ரீபரந்தாமனாகிய பரமாத்மாவானவர் தனது மலர்க்கரத்திலிலங்கும்படியான பாஞ்சசன்ய வலம்புரிச்சங்கத்தையெடுத்து இரண்டு முகூர்த்தம்வரையில் செயசங்கத்தொனிமுழக்க அந்த திவ்யசோலையின்கண் விநோதங்களையெலா நோக்கி அந்தஸ்தானத்திலும் ஓர் சிவக்ஷேத்திரவேண்டுமெனத் தேவர்கள் விரும்பியபிரகாரம் ஸ்ரீபகவான் வலம்புரிசெயதொனிசெய்த ஸ்தானத்தில் ஸ்ரீவலம்புரிநாதர் வாலாம்பிகையென்னும் ஈசுராலயம் ஒன்று பிரதிஷ்டைசெய்து சர்வதேவர்களும்

முனிவரும் சூழ வணங்கி ஸ்தோத்திரம்பண்ணி அந்த க்ஷேத்திரத்தில் பூஜிமுனிவரைப் பூசிக்கும்படி செய்வித்து ஸ்ரீபராசர மகாமுனிவர் வசிக்கும் அமுதபுட்கரணியின் பாங்கரில் ஸ்ரீபகவானுடன் சர்வதேவர்களும் வந்து ஆனந்தப்பூமாரிபொழிந்து ஸ்ரீபராசரை வாழ்த்தி ஓ முனிசிரேஷ்டரே நும்பொருட்டால் சகல ஜீவர்களுடைய இம்சையும் தீரும்படி இராக்ஷதர்களெல்லோரையு சங்காரம் பண்ணினோம். இனிமேலுமது தலத்திலுக்கிடையூறில்லாது கடாத்திவாழ்கக்கடவீரென்று ஸ்ரீபகவானுரைக்க ஸ்ரீபராசமகாமுனிவரும் ஸ்ரீமாயனை நேயத்தோடிறைஞ்சி ஓ மாதவனே அடிமைக்கிரங்கியவாறே இன்னோர் வரம்வேண்டுமெனக்கூறினார். இயாதெனில் இச்சோலையின்கண் இன்னும் அரிய தபோநிதிகளாகிய ரிஷியேசுரர்கள் நிஷ்டைகூடியிருப்பதால் இத்தலத்தில் வெப்பவும் மற்றும் அசுரரிம்சைவாராது. நினது கருணையால் காக்கக்கடமையெனக் கூறினார். இப்படிக்கிறைஞ்சும் வசனத்திற் கிரங்கியும் ஸ்ரீபகவானனவர் தமது திருக்கரத்திலிலங்கிய சக்கரத்தில் அபிக்கியமாயமர்ந்திருக்கும் சோதரியாகிய நாரணியைத் தியானித்தளவில் உடனே அச்சக்கரத்தில் நின்றும் விடுபட்டுக் கோடீரமான சடிலத்தோடு பசியமேனியாய் அம்மேனியில் அசுரர் சோரிகள் புரண்டங்கத்தோடு பிரசன்னமாகி நின்றாள். இவ்வித மூன்றங்கத்துடன் இலங்கிய அம்மையைநோக்கி சர்வதேவர்கள் முனிவர்கள்கொண்டாட ஸ்ரீபராசரும அநேகவிதமான சாமளாஸ்தோத்திரம்பாடநின்ற காரணி கூறுவாள். ஓ பராசமகாமுனியே! அஞ்சேலென்று, இனிமேல் இச்சோலையினும் அடுத்தநகரத்தினும் யாம் இப்போதிலங்கும் ரூபத்தோடு கோடீரசாமளபிரவாள காளியாய்நின்று பாதுகாத்தருள்வோம் என்று திருவுளமகிழ்ந்தருளிய பின்னர், சர்வதேவர்களும் ஸ்ரீபகவான்முதலாய சத்தியும் அந்தரத்தியானமாகினார். இச்சரித்திர புராணகருத் தியாதெனிலிப்போது கோடீர சாமள பிரவாள காளி என்றவை கோடீரம் சடைமுடியுடைய கோடிகாளியாயும், சாமளம் பச்சைக்காளியாயும், பிரவாளம் பவளகாளியாயும், தஞ்சகாசூரனால் வேட்டவரம்போல் தஞ்சைமாநகரெனவும் அவன்மாய்கையால் சாமரூபத்தால் சக்கரத்தாலறுப்பட்ட தலம் சக்கராசாமமெனவும் ஸ்ரீபகவான் சிங்கரூபமெடுத்து வராக

ரூபமான தாருகாசூரனை யழித்த தலம் தாருகன் பட்டெனவும், யித்தன்னசைக்கு உபக்கோட்டையாய் விளங்கிய தலத்தில் தாருகாசூரனைக்கிழித்த நரசிங்கமூர்த்தியாய் வெறியாலோடி நின்றத் தலத்தில் வலாசூரனை மாய்த்த தலம் வல்லமெனவும் இந்திரன் வச்சிரத்தாற் றுனைத்தவழி பாதலகங்கையுண்டானது வச்சிரதீர்த்தமெனவும், அத்தலத்தி லின்னும் தென்தமர் முதலாய அரிநர புத்திரர், செண்டிகா, கபிலர் யின்னும் பலவித தீர்த்தங்களெனவும், அம்பாளெய்த சரளமணிவீழ்பட்ட தக்கன் குறிஞ்சியென்றது தச்சனகுறிச்சியெனவும், விண்ணோர்கள் வந்திறங்கிய தலம் விண்ணாறெனவும், தனதனாகிய குபேரனாற் பிரதிஷ்டைசெய்த ஸ்தலத்தில் வசிக்கும் ஈஸ்வரனை தஞ்சைபுரீசர் ஆனந்தவல்லியெனவும், யூகிமுனி பூசித்த மகா திவ்யக்ஷேத்திரத்தில் ஸ்ரீ பகவான் அசுரனைவென்று செயசங்கந்தொனிசெய்த ஸ்தலமோ வலம்புரியெனவும், மணிமுக்தநதியை வடவாறெனவும், ஸ்ரீ பகவானிடம் அசுரர்கள் கேட்ட வரம்போல் அவர்கள் முன் தோற்றியழிக்கறபொருட்டாய் ஸ்ரீ பகவானனவர் நீலமேகப்பெருமாள் மணிமகுடங்கொண்ட பெருமாள் சிங்கப்பெருமாளாயும், ஏககாலத்தில் அமுத புட்கரணியடுத்திலங்கியும் அசுரன் கேட்ட வரம்போல நகரின்பெயர் தஞ்சைமாநகரெனவும், விளங்கிவருகின்ற இவ்வஸ்தலத்தின் மகிமையைச் சேடனுலுவமிக்கக்கூடாது. அந்நகர் சூழ்ந்த ஆரணியத்தில் மகா புண்யங்களுக்கு நிதியான காவிரியின் ஐந்து கடிகை தூரத்திற்கு தெற்காயும் அமுதபுட்கரணி மணிமுத்தநதிக்கு ஈசான்யபாகத்திலும் பிரமவசிட்ட மாக்ஷேத்திரமென்றும், சமிவனமென்றும், பற்பூரகானமென்றும், நாமகரணமுளது. அப்பேற்பட்ட மகா க்ஷேத்திரத்தில் பிரமா, சப்தரிஷிகள், ரவி, மதி, வசிட்டராலும் அவரவர்களால் அத்தலத்தில் ஒவ்வொரு தீர்த்தங்களை முண்டுபண்ணி நேமசங்கற்பாதிகளை நடாத்தி, அவ்வன்னியங்கோயிலிற் பிரகாசிக்கின்ற இயாதொரு சிவபிரானை பூஜிக்கப்பட்டது. சந்திராதித்தாள், பிரமா, வசிட்டர் இன்னும், பல மனுவரசர்களுக்கும் அநேக கொடிய சாபங்களும் அந்தத்தலத்தில் நிவாரணமானதென்று சௌனகாதி மகாரிஷிகளுக்கு சூதபுராணிகர் சொல்லலாயினர்.

அசுராள்வதைச்சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது சமிவனத்தில்

# இலிங்கோற்பத்திச் சருக்கம்.



விருத்தம்.

நாரணன் வாளிச் சதியினாலமரர்
நசித்ததுந் தஞ்சைமாநகர்க்குக்
காரணத்தலங்கள் பலவமைந்ததுவுங்
கழறியகதை ரசஞ்செவிக்குப்
பூரணமானே மெனரிஷிசூத
புராணிக ரடிபணிந்தேத்தி
ஆரணங்கடந் தோனுறை சமிவனத்தின்
அதிசயங் கூறுமென்றனரே.

இப்படிக் கிறைஞ்சிய சௌனகாதி மகாரிஷிகளை ஸ்ரீ சூதமகாமுனிவர் நோக்கி, இத்தஞ்சைமாநகரம் சமிவனத்தில் சோதிலிங்க முற்பத்தியான மகான்மியத்தை சொல்லத் தொடங்கினர். ஓ நைமிசாரண்யவாசிகளே கேட்பீராக: இந்த வராக கற்பத்தின் முன்சென்ற பதுமகற்பத்தில், உலகமுழுவதும் பிரளயம்வந்து மூடிக்கொண்டபோது, மீட்டும் நான்முகனைப் படைக்கும்பொருட்டு, திருமாலானவர் பாற்கடலில் வடபத்திரத்தின் மீது இயாதொரு பரமசிவத்தைத் தியானித்துக்கொண்டு, யோகநித்திரை செய்திருக்கையில், அவரது நாபியினின்றுந் தோன்றிய தாமரை மலரில் சதுமுகன் பிறந்து, தன்னைத் தாங்கும் தாமரைமலருடன் மிகவும் அலைவுற்று வருந்தி சலப்பிரவாகத்தில் வீழ்ந்தாழ்ந்தகாலத்தில் சிவபிரானைத் தியானித்து, அப்போது சம்பவித்த துன்பத்தினின்று நீங்கி எம்பெருமானது கருணைப்பிரவாகத்தால், உறுதியாகிய ஒருண்மைநிலையை யடைந்து பஞ்சசுத்திசெய்துகொண்டு, பரிசுத்தமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் செபித்து, பிராணாயாமயோகத்திலிருந்து பரமசிவத்தை யகத்தின்கண்ணே தியானித்து அவரது திருவடித் தாமரையை ஸ்தோத்திரம்பண்ணினான். இவ்வாறு

பிரமதேவன் றுதிசெய்த வியப்பை யோர்ந்து, சிவபிரான் அநேக கோடி சூரியப்பிரவைபோலுந் தமது திருமேனியினது ஒழியைக் காட்டி, ரிஷபவாகனத்தின் மீது பார்பதி தேவியாருடனே சகளீகரித்துவந்து தரிசனமளிக்க, பத்மாசனத்தனுகிய பிரமனும் கண்ணுற்று ஆனந்தபாஷ்பமுதிர உடல்புளகிக்க உள்ளத்தடங்காத பேரன்பானது மேலிட, உமாதேவியை வாமபாகத்திலுடைய முக்கட்சோதியைத் துதிப்பானுயினன். யாவர்க்குமுன்னவனே, எல்லாமாய் நின்ற நின்மலனே, மனவாக்குக் கதிதப்பட்டுள்ளவனே, சர்வலோக நாயகனே, தியானிப்போருள்ளிருளகற்று ஞானமார்த்தாண்டனே அடியேனை யாட்கொண்டருளிய விமலனே, சத்தியோர் வடிவமதானவனே, மாயாமலபந்தர்களாகிய ஆன்மகோடிகட்குத் தநுகரண புவனபோகங்களைத் தந்து, படைத்தும், காத்தும், அழித்தும், திரோபவித்தும், அனுக்கிரகஞ்செய்யாநின்ற தலைவனே அகண்டபரிபூரண பரஞ்சோதியாகியும், பஞ்சசத்திகளும், பஞ்சகர்த்தாக்களுமாகியும், பலவித மகாபூதங்களும், சகல சராசரவுயிர்களுமாய் நின்றிலங்குபவனே 'உனக்கு' நமஸ்காரம், தத்துவங்களெல்லாங் கடந்தப்புறப்பட்டுள்ளவனே யாகங்களுக்கெல்லாம் கர்த்தாவாயிருந்து மவற்றை நடாத்துபவர்கட்கு திருக்கருணை பாலிப்போனே, உயிற்குயிராய் விரவிநிற்போனே, அன்பின் வயப்பட்டுத் துதிக்குமடியார்க ளிதயகமலத்தி லானந்தத் தாண்டவம்புரிவோனே, எல்லா வுலகங்களுக்கும் சாட்சிபூதனுய நிற்போனே, உனக்கு, நமஸ்காரம். உலகின்கண் உனது அனந்த பெருமைகளையெடுத்தோத ஒருவரும் வல்லரல்ல ராதலால், யான் யெவ்வாறு புகலச் சக்தியுடையவனுவேன், துதியாவிடினு மபசாரமுண்டாமாகையால், யென் சிற்றறிவுக் கெட்டியமட்டும் போற்றிசெய்தேன் பொறுத்தருளவேண்டும். அடியேன் மகா விஷ்ணுவினுடைய உந்தியங்கமலத்திலுதித்து உலகெங்கும் பரந்துள்ள இவ்வூழிவெள்ளத்தி லாழ்ந்து மிகவும் மெலிவடைந்து பயந்துள்ளேன், என்னுள்ளத் துயரகற்றி யடிமைகொண்டருள்வாய் எம்பெருமானேயென்று, பிரமதேவன் குறையிரந்து ஸ்தோத்திரஞ்செய்தலும், கருணையங்கடலாகிய சிவபிரானும் இன்னருள்கூர்ந்து, நான்முகனே நீ ஜநநகாலந்தொட்டு பிரளயவெள்ளத்தின் மூழ்கிப் பெருந்துயருற்றனை யினிமேல் நீயும் மிகநலமெய்தி வாழ்வாய் அஞ்சல்வே

ண்டாம் உன்னுள்ளத்தில் வேட்ட வரங்கள் யாவுந் தந்தருளுவோமென்று திருவாய்மலர்ந்தருளிய கருணைச் சதுமுகக் கடவுளிதயமகிழ்ந்து சிவபிரான் சந்நிதானத்தில் இவ்விண்ணப்பிக்கலாயினன். சுவாமின் அடியேன் மனிதர், தேவர், நாகர், பறவைகள், விலங்குகள், மற்றுமுள்ள பற்பல பிறவிகளடைந்து இப்போது பிரமனுய்ப் பிறந்தேன் யினிமேற் பிறப்பிறப்பிலுழன்றிளைக்கவாற்றேன், அடியேன் செநந மரண துக்கங்களை யொழித்தாண்டருள்வாய் சங்கர சுயம்புவேயென்று வாமபாகத்திலிருக்கும் உமாதேவியாரையும் பத்தியோடு வந்தித்து ஸ்தோத்திரம் புரியக்கண்டு தேவியார் திருவுளமகிழ்ந்து நாயகனை நோக்கி சுவாமி, இவ்விரிஞ்சனுக்கு திருவடை பாலித்தருளவேண்டுமென, இனிது மொழிதலும் எம்பெருமான் அவ்வண்ணமே யருள்புரிவோமெனத் திருவாய்மலர்ந்தருளிப் பராசத்தியாருடன் அந்தரத்தில் மறைந்தார். உமாசமேதராயிடபவாகனத்திலாரோகணித்துவந்து காக்ஷிதந்த சிவபெருமான் மறைதலும், சதுமுகன் கண்காணாத துக்கசாகரத்திலாழ்ந்து நாயேன்புரிந்த குற்றம் யாதோவென்றுரைத்து கண்ணீர் மல்கவழுது வருந்தி எவ்வாற்றானேனும் சிவபெருமானை யடைதல் வேண்டுமெனக்கருதி பஞ்சேந்திரியங்களைமுனிந்துபிராணவாயுவைபிங்கலைவழியேயடக்கி சுழிமுனையிற் பொருந்தமுறநிறுத்தி ஆறாதாரப்படிகளையுங்கடந்து பரமசிவனுடனே தனதான்மாவைக்கூட்டி, யோகத்திலிருந்து தேகத்தை மூலாக்கினியினாலே தகித்தனன். அச்சதுமுகனுடலதனையுண்ட மூலாக்கினியானது உலகத்தை முற்றுமுடியுள்ள ஊழிவெள்ளத்தை யதிவிரைவிலுண்டு, பரமசிவத்தின் கருணைவிசேஷத்தால், சுவாலாஜலந்திரண்டிருந்தது. காளகண்டனாகிய சிவபெருமானும், பிரமன் தன்சரீரத்தை மனோதிடத்தினால் மூலாக்கினியால் தகித்தனனென்று, திருவுளத்தின் கருணைபூண்டு அவனது பவத்தைப்போக்கி முத்திச்செல்வம் பிரசாதிக்கதற்கு, அவ்வக்கினியின் மத்தியிற்சமீபத்தில், ஓர் சித்திரமான சமியிருக்கமாயும், அதன்கீழ் சோதிலிங்கமயமாகவும், யெழுந்தருளினார். அப்படிப்பட்ட சோதிலிங்கமுற்பவமான யிடத்திற்கு கீழ்பாகத்தில் திரண்டுநின்ற ஊழிவெள்ளமானது ஓர் திவ்யதீர்த்தமாகி, ஆத்மகோடிகளெல்லாம் ஸ்நானஞ்செய்து பாவந்தீர்ந்து மோக்ஷமடையுமாறு, குளிர்ச்சியுள்ளதாயமர்ந்து ஆவின்றேகமுழுதினும்

பாலேநிறைந்திருந்தாலும், அப்படிக்கொத்த பாலானது மூலைக் கண்வழியான்மாத்திரங் காணப்படுமாறுபோல் சர்வபிரபஞ்சங்களி லும் வியாபித்திருக்கின்ற பரமசிவமே. அச்சமிவனத்தின் கீழில ங்கும் சோதிலிங்கத்தின்கண் உலகத்தார் தரிசித்துய்யும்பொருட்டு பிரசன்னமா வீற்றிருந்தருளினார். கருணாமூர்த்தமான சிவ பெருமான், அச்சோதிவன்னியிற்றங்கி மூலாக்கினியை நோக்கி நாம் தொன்முறைபோலுலகங்களைப் படைத்தற்குத் திருவுளங் கொண்டோம். இனி நீ பிரளயஜலத்தைக்கடந்து யாண்டுந்தகி யாமலிருந்து, நம்மைவிட்டுப்பிரியாமல் ஒரு யோசனையாம் ஓங்கி, ஐநூற்று வெண்பத்தாறடியளவு சூழ்ந்திருக்கக் கடவையென்று பணித்தருளலும், அம்மூலாக்கினியும் எம்பெருமானைப்போற்றி நன்றென்றதற்கிசைந்து, சிவபிரான் ஆக்ஞையின்படியே யவ்வன முழுவதும், சீதளமாகி ஒன்றையுந் தகியாமலும் யாவர்கண்ணுக் கும் புலப்படாமலும், வன்னியங்கோயிலாவிளங்கினது. அப்படி விளங்கும் வன்னியங்கோயிலில் சிவபிரானும் அருளுருவாயெழுந் தருளி யற்புதந்தோன்றும்படி வீற்றிருந்தருளினார். யாவரும் சமிவனேசரெனப்புகலுமாறு, அங்கண்வந்து வேண்டுமடியார்க ளுக்கநுக்கிரகஞ்செய்ய விளங்கிய கருவேலநாதருடன் சேர்ந்திருக் கும் உமையவளது திருநாமம் பராசத்தியென்றும், ஜகதம்பாளெ ன்றும், சாதாரணமாயுலகிலுள்ளோர் பிரத்நாயகியென்றுங் கூறு வார்கள். பிரமன் அங்கத்தில் நின்றெழுந்த மூலாக்கினியானது உலகமெங்கணுமோங்கிப்பரவிய வெள்ளத்தை ஒன்றுபடியாய்ச் செய்து எங்கும் வியாபித்து பக்கங்களிற் றிக்குகள் முன்போலே சூழ்ந்து தோன்றும்படிசெய்து ஏற்பட்ட காரணத்தால் இந்த க்ஷேத்திரத்திற்கு வன்னியங்கோயிலென விளங்கும்படியான தலத் தில் வீற்றிருந்தருளும் பற்பூரகானேசரானவர் தன்னைத் தியானித் து நிஷ்டையிலிருக்கும் பிரா மகனுக்குப் பதவியினையும் சிருஷ் டித்தொழிலையும் பிரசாதித்தருளி, சிவகணங்களெலாம் சூழ்ந்திருக் கும்படி, யத்தலமோ கருணையங்கோயிலான கருவேற்கானமெனவு ம், பற்பூரகானமெனவும், சமியெனும வன்னியஞ்சோலையுமா விள ங்குவதுமென்று சௌனகாதி மகாரிஷிகளுக்குப் பூதபௌஷிய வர்த்தமானமுமுணர்ந்த சூதபுராணிகர் சொல்லலாயினார்.

இலிங்கோற்பத்திச்சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

ஆறுவது

# சமிவனேசர்மகிமைச்சருக்கம்.

கலிவிருத்தம்.

அமினிதாநைமி சாரண்யவாசிகள்
தமிருநற்காங்கூப்பிச் சரண்செய
குமினிகர்த்த குணந்திகழ்சூதர்மா
சமிவனேசர் தனிவியப்போதுவார்.

இப்படிக் கநேக வணக்கத்தோடு வந்துகேட்கும் நைமிசாரண்யவாசிகளாகிய ரிஷிகளை நோக்கி சமிவனக்ஷேத்திர மகிமையும், மூர்த்தி மகிமையும், தீர்த்தமகிமையும் ஸ்ரீ சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினார். ஓ நைமிசவாசிகளே! தங்களுடைய பஞ்சேந்திரியங்களுக்கு மனதேவற்புரியாது திரிகாணங்களொன்றி இக்கதையைக் கேட்பீராக; ஸ்ரீமந்நாராயணமூர்த்தியருளு நாமகரணம் விளங்கிய தஞ்சைமாநகரத்திற்கு உத்தரபாகத்தில நான்கு கடிகைதூரம் விலாசமுள்ள மேற்கூறிய ஒருபெரிய வன்னிவிருக்ஷமெனுங் கருவேற் பற்பூரகானமொன்றிருப்பதில் இன்னும்பலவித முட்செடிசூழ்ந்த ஆரண்யத்தில் பலவித மிருகாதிகளுஞ் சஞ்சரிக்கும். அதிலோர்பெரிய கருவேலெனும் பற்பூரவிருக்ஷத்தின் கீழாக சோதிமயமாய் ஒரு மகாலிங்கம் விளங்கியதில் அவ்வனத்தில் வசிக்கும் உத்தமஜாதி காராவுகள்வந்து அதின் க்ஷீரப்பிரவாகத்தால் லிங்கமீது சொரிந்து அபிஷேகிக்கவும், அவ்வனத்திலுள்ள கஸ்தூரிமிருகம் புனுகு சவ்வாதுடைய மார்ச்சாலங்கள்; கதம்பகந்தங்கள்சாற்றவும், பற்பல சோலைகள் மலர்தூற்றவும், பற்பூரவிருக்ஷத்தின் பத்திரத்தால் தூவி அருச்சிக்கவும், ஈஸ்வரசானித்தியமாமென்று ரவிமதியாராதனையால் விளங்கும்படியான உக்கிரஷ்டமகாலிங்கம் பிரகாசிப்பதுணர்ந்துவந்த விதேகியான வசிட்டரும் அயனும் கலாநிதியும் மார்த்தாண்டனும், தனக்குற்ற கொடிய சாபங்களினின்று விடுபட்டவர்களா சகலவித ஐஸ்வரியங்களையும்

அடைந்தனர்களென்று சூதபிரான் சொல்ல நைமிசவாசிகள் மிக வும் வியந்து அப்பேர்பட்டமகாலிங்கத்தின் மகிமையை விபரமாய்ச் சொல்லவேணுமென்று வந்தனஞ்சமர்ப்பிக்க சூதபுராணிகர் வசிட் டர் விதேகம்வந்து நிவாரணமான விர்த்தாந்தம் கூறுகின்றார்.

சமிவனேசர்மகிமைச்சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது

# வசிட்டர்விதேகமுற்றசருக்கம்.

விருத்தம்.

பைந்துணைசொளிருநைமிசாரணிகள்
 பதந்தொழுதிறைஞ்சிமாமுனிமை
விந்தைசேர்வசிட்டர்விதேகமதான
 வியப்பெனவிரிஞ்சனுக்கரிய
மைந்தற்குமெவ்வர்யாருளர்சாபம
 வந்ததோவென்செய்தார்ந்தோ
அந்தணுவிந்தச்சரிதையைமுன்பின்
 னறிகிலோமுறைக்கவென்றருள்வார்.

ஓ மகாரிஷிகளே கேட்பீராக இராதந்தரகல்ப்பகாலயத்தியில் இக்ஷ்வாகு வம்சத்தில் உற்பத்தியான நிமிச்சக்கிரவர்த்தியென்ற ஓர் அரசன் இராச்சியபரிபாலினங்களிலும் வேதநெறியின் சர்வ உபநிடத்துகளிலுஞ் சிறந்த சம்பன்னுய் புத்திரபௌத்திராதி சேனுசதுரங்கபலங்களுடன் செங்கோன்முறை வழுவிலாது நடா த்துங்காலையில் ஓர்நாள் மோக்ஷார்த்தகாமியக்கிரியையுன்னி ஓர் மக நிறைவேற்றவேணுமென்ற இச்சையுடையவனுக தன் குலபுரோ கித சிரேட்டரான வசிட்டரை வரவழைத்து ஆசனமுதலி சோட சவுபசாரங்களுடன் நமஸ்கரித்து இனிய வசனங்களினுல் ஸ்தோத் திரம்பண்ணி ஓ நங்குலகுருவே அடியேன் உத்தேசித்திருக்கின் றது மகேஸ்வரமென்ற பெயருள்ள ஓர் வேள்விசெய்ய சிந்திக்

கிறேன். ஆதலால் அடிமை நினைவின் இச்சையைப் பூர்த்திபண்ணி
கிர்தார்த்தனாக்க கிருபைசெய்யவேணுமென்ற இக்ஷ்வாகு குலதில
கனாகிய இறைவனை நோக்கி ஏ இராஜயோக தபசிரேஷ்டா! நீர்
வேண்டிக்கொள்ளும் விஷயம் சரியே. முன்னமே பொன்
னாட்டதிபன் என்னிடமுரைத்தனன். நன்னாள் மகமொன்று
இந்நாட்டெய்வதற்கு சொன்னசொற்றவறேன். ஆகையால் நான்
மகபதியாகுந் தவறாமல் முன்னமே நடாத்தியும் பிற்பாடு உம்மு
டைய வேள்வி முடித்துவைப்பேனென்று வினவி, பொன்னாட்டுக்
கேகினார். வசிட்டர் அப்படிசென்றவுடனே தவ ராஜனான சக்கிர
வர்த்தியுந் துக்கித்து ஆஹா நமது இச்சையை வசிட்டர் லட்சிய
மில்லாமற்போன விஷயமென்று மகா சஞ்சலமடைந்து இம
மேல்பெயர்களைக்கொண்டு நம்ம நாம் முடிப்போமெனக்கருதிக் கௌ
தமர் ஆசிரமத்திற்குச்சென்று கௌதமரிஷியைக்கண்டு, மனமகிழ்
வோடு நின்று, வந்தனை வழிபாடாக்கொண்டு, நினைத்துறும் விஷ
யத்தைவிண்டு, தாங்களேமுடிப்பிக்கவேணுமென்று, கூறிய பூபதி
யை கௌதமரிஷியானவர் நோக்கி, ஓ இராஜனே உமது குலகுரு
வாகிய வசிட்டரால் வேள்விநடத்தாமல் நான்செய்துவைப்பது சரி
யல்லவேயென்று உள்ளபடியே பலதரம் கௌதமருரைக்க சக்கிர
வர்த்தியும் கேளாமல் நான் கேட்டுக்கொண்டபடிக்கு செய்துவைக்
காமல் தேவபிரானுக்கு செய்துவந்தபின் நடத்திவைப்பேனென்று
போனபின்பு தானிவ்விடம் வந்தேன். ஏனெனில் மகத்திற்குப்
பொருந்திய நாளை விட்டுவிடுவதுமன்றியில் ஜென்மம் அனித்திய
மல்லவோ. ஆகையாலடிமைகிர்தார்த்தனாக செய்துவைக்கவேணு
மென்று பலவாறு ஸ்தோத்திரஞ்சொல்லக்கேட்டு கௌதமரிஷியும
சம்மதித்து யெக்ஞாதிகளுக்காக வேண்டிய சாமக்கிரியையாவும்
குறைவின்றி திட்டம்பண்ணி கௌதம தீர்த்தத்தருகில் ஓர் ஓம
குண்டம் வகுத்து அரசனோடு கௌதமமுனியுமிருந்து சுருவை
யால் அக்கினிக்கு ஆகுதிபண்ணி அவிர்ப்பாகமளித்து இராப்பக
லாய் மூன்றுநாள்வரையில் ஊணுறக்கமில்லாமல் வேள்விமுடித்தும்
வந்திருக்கு முனிவரர், பூசுரர், யாசகர்முதலியவர்களுக்கும் கன
கம்வாகன வஸ்திரங்களுமீய்ந்து தன்னுடைய அரண்மனைக்கேகி
மசம்செய்த தேகசிரமத்தினால் பரிகாரசயனத்திலிருக்கின்ற காலை
யில் யிந்திரபதிக்கேகிய வசிட்டமகாமுனிவரும் மகபதியின்வேள்

வி நிறைவேற்றி அரசனுக்குரைத்தபடி செல்வோமெ௳ உலகில் வந்தும்பலானவர்களால் அரசன் வேள்வி கௌதமரிஷியால் முடிந்ததெனக் கேள்வியுற்று பூபதி அரண்மனைபுக்கி நான்வந்துவிட்டேன் அரசனுக்குரையென்று ஒரு தூதனனுப்ப அரசனும் தேகசிரமத்தினால் அயர்ந்தவனாகி மூன்றாவது தூதன் மூலமாய் வெளியில் வந்து மகாமுனியாகிய வசிட்டரைக் கண்டு நாணங்கொண்டு வந்தனைபுரிந்தான். முனிவன் புன்னகைகொண்டு ஓகோ! நிமிச்சக்கரவர்த்தியே நீயோ யென்னை யெவ்வளவேனுங் குலகுருவென்று மதியாமல் யென்னையும் அலக்ஷியப்படுத்தி கௌதமரைக் கொண்டு வேள்விமுடித்ததுந் தவிர, நா நேரில்வந்தழைப்பதற்கும் சட்டைபண்ணாமல் அசட்டையாய் யெண்ணிவந்தாயடா அடடா கொடிய மூடா, மகா திருடா, அரசரில் முரடா, நீயுங் கெடடா வென்று சினந்து, நெடுமூச்செறிந்து, இருவிழிசிவந்து, வசிட்டனுமுனிந்து, பிடிபிடி சாபம், பொருக்கேன் கோபம், விடாதடா பாபம் நீயோ செடத்தை நீத்து விதேகியாய்ப் போகக்கடவா யென்று சபித்தனர். பூபதி கேட்டு உள்ளங் கலங்கி, குலகுருவாகிய வசிட்டரை நோக்கிக்கூறுவான். ஆஹா நான் செய்தது அகிர்த்தியமல்லவே கௌதமரிஷியால் நான்முடித்தது நற்கிர்த்தியமானால் தாங்களிட்ட சாபம்போல் தாங்களும் அப்படியே விதேகியா யலையக்கடவதென்று சபித்தனன். இப்படிக்கு அரசனிட்ட சாபமானது குருவாகிய வசிட்டரைப்பற்றி தேகநீங்கி, காற்று ரூபமாயெங்கேயும் சஞ்சரித்து பெருந்துயருற்று துக்கசாகரத்தாழ்ந்து, ஓகோ யிச்சாபத்தை யாரால் நிவர்த்தித்துக் கொள்வோமென்றெண்ணி, தன் பிதாவாகிய நான்முகப்புத் தேளிட நண்ணி வேதாவின் பாதபத்மங்களை இதயத்திலுன்னி, தனக்கு நிமிச்சக்கிரவர்த்தியினாற் கிடைத்த கொடிய சாபத்தை அயனிடம் சொல்லினர். இஃதைக் கேட்ட மலராசனக்கடவுளும், ஓ புத்திர சிகாமணியாகிய வசிட்டரோ இச்சாபம் தீர்வதற்கு ஓர் உபாயம் சொல்லுகிறேன் நீயு மஞ்சாதே கேட்பாயாக, கன்ம பூமியின்கண் பூலோக கயிலாசமாகவிளங்கும் பஞ்சநத க்ஷேத்திரமென்றொன்றுண்டு, அந்தக்ஷேத்திரத்திற்கு தெக்ஷணபாகத்தில் ஒருநாழிகைதூரத்தில் யென்னுடைய பஞ்ச சிரங்களில் ஓர் சிரசைக் கண்டனம் செய்த வீரட்டேச்சுரர் வசிக்கும் கண்டியூர் க்ஷேத்திரமொன்றுண்டு. அந்த

க்ஷேத்திரத்தில் நின்றும் ஐந்து கடிகை தூரத்தில் மகா விசேஷ முக்கிய ஸ்தலமான சமிவனக்ஷேத்திரமொன்றுண்டு. அந்தக்ஷே த்திரமோ இப்போது பற்றூரவனமாகவும், அவ்வனத்தின்கண் கரு வேலின் கீழாக சோதிலிங்க சொரூபமாகவும் விளங்கிவருகின்றது. அந்த க்ஷேத்திரத்தில் யெப்பேர்ப்பட்டசாபங்களும், தேகரோகங் களும் நிவாரணமாகும். இதுவுமன்னியில் யாமும் சிலநாட்கு ளாங்கு வருவேன் ஆகையால், அந்த ஸ்தலத்திலடைந்து உனது மனோபேஷ்டபிரகாரம் சாபத்தை மாற்றிக்கொள்வாயென்றும், இந்த சாபம் தீருமோவென்று சந்தேகிக்கவேண்டாமென்று பூர்வ த்தில் எனக்கு ஈஸ்வரனைப்போல் ஐமுக மிருந்ததும் உமா கண்டு சந்தேகப்பட்டதும் உமாபதியா லொரு சிரங் கண்டனமானது ம், திரும்ப அதிலுள்ள விர்த்தாந்தங்களை ஓர் கதையாகச் சொல்லி நீ பயப்படாதே, அதி துரிதமா அக்ஷேத்திரமடைவாயென்று விடையளித்தனன் இப்படிப்புத்திரனாகியவசிட்டருக்கு பிரமதேவன் கூற, பின்பு பிதாமகன் விடைபெற்று மாருதியாய் விளங்குகின்ற அருந்ததி கேள்வனாகிய வசிட்டரும் தனதுஆச்சிரமமடைந்து பத் தினியாகிய தன்மிட்டையை நோக்கி, ஓகோ கற்பிற் சிறந்த விற பனமாகிய சற்குண அஞ்சுகமான அருந்ததியே கேட்பாயாக இப் போது யெனக்கு நிமிச்சக்கரவர்த்தியால் சாபங்கிடைத்து விதே கமாய்விட்டதும், பிதாவாகிய பிரமதேவனிடம் போய் நிவார ண வகை கேட்க, அவரால் வினவிய தியாதெனில், கன்ம பூமியி ன்கண் மகா க்ஷேத்திரமாயும், ஈஸ்வரனே பிரத்தியக்ஷமாய் விளங் கும் சமிவனமடைந்தால் நிவாரணமாமென்று கூறினர். ஆனால் யான் போய் சமிவனமடைந்து தவஞ்செய்யவேண்டும், நீயும் வருகி ன்றாயோ இங்கு வசிக்கின்றாயோ வெனக்கேட்ப. தத்தைகள் போல் வசனிக்கும் உத்தமியாகிய தன்மிஷ்டையானவள் கேட்டு, (ஓ) வேதமுட்கொண்டு, நாதனையோர்ந்த, மாதவமுனியே அ டியாளும் வருவது திண்ணமென்று கூற ஆச்சிரமத்தை நீங்கி, பத்தினியாகிய தன்மிஷ்டையுடன் மலை, கடல், வனாந்தரங்க ள், காடு செடிகள், குன்றுகளடர்ந்த கற்பாரையோங்கிய ஆரணிய ங்களுங் கடந்தலைந்து, யிச்சமிவனம் பக்ஷிமபாகத்தில் பதிநான்கு கடிகை தூரத்திற்கப்புரம் மிகு சோபத்தோடும் வருகையில் ஓர் மகா சிவயோகியானவர் விபூதிகண்டமாலிகா உருத்திராக்ஷலிங்க

விருத்த ரூபத்தோடு ரவி யொளியைப்போலும் தேயசு பிரகாசிக்க ஓர் விருக்ஷத்தின் நிழலிற் சயனிக்கக்கண்டு, தாங்களும் வந்த சோப நீங்கும்படி யந்த நிழலிற்றானே விதேகியான வஷிஷ்டரும் அருந்ததியு மெழுந்தருளினார். பின்பு சோப நீங்கி தன் பத்தினியை நோக்கி ஏ பொற்புடையாளே நா னிச்சாபத்தை யனுபவித்துவருகிறபரியந்தம் இவ்விடத்தில் ஈஸ்வரனை நோக்கி, யென் விபத்தைக் குறித்து தபசுசெய்யக் கடவாயென்று விதேகியானதால் அசரீரிபோல வினவ சப்தம் சயனிக்கும் யோகீஸ்வரர் செவிபுக யெழுந்திருந்து திரிகாலவர்த்தமானமும் அறிந்த யோகியானதால் நாம சொற்பனவஸ்தையிற் கண்ட ஈஸ்வர னுத்திரவின்படியாகிய வசிட்ட ரிவர்தானென்றுணர்ந்து ஓ விதேகமடைந்த வசிட்ட மகாமுனிவர் நீர்தானோவென்று நோக்கி தானிருந்த தலங்களும், தரிசித்த தலங்களும், தனக்குத்திரவான சொற்பனமகிமையும், இத்தீபாரணிய க்ஷேத்திர விசேஷத்தையு சவிஸ்தாரமாய்ச் சொல்லி முடித்தும் ஓ வசிட்ட மகாரிஷியே கேட்பாயாக. இத்தலத்தில் விளங்கியது அருணாசல ஈஸ்வரர் யெமது நாமகரணமும், அருணாசலயோகி இவ்வுலகத்தின்கண் அநேக மூர்த்தி தலம் தீர்த்தங்களுந் தரிசித்து மகாரிஷி தபோதனர்களையும் சேவித்து, கமலாலயம் வாவி சிறந்த திருவாரூரிற் உமாபதியையுந் தரிசித்து அவ்விடம் விட்டெழுந்து இவ்விருக்ஷந்தருகிற் சயனித்திருக்கையில் யெனது கியானசொற்பனமாக்கண்டதியாதெனில் இதோ பதினான்கு கடிகை தூரத்திலிருக்கும் சமிவன க்ஷேத்திரத்திலிருந்து அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகரான சாட்சாத் பரமசிவ சொருபமிலங்கவும் தமியேன் கண் யெழுந்தருளியும வினவியதியாதெனில், அப்பா நீயோ மகாயோகியாகிய யெனது பத்தனானதாலும் இதோ நேரில்விளங்கிய சமிவனத்திற்சென்று உன்னால் ஒரு லிங்க ஸ்தாபனம் செய்து மகா வேதவாக்கியத்தின்படி நீ பூசித்து வருவேயாகில் சில நாளைக்குள் நீயும் சர்வ சாம்பிராச்சியங்களு மனுபவித்து சீக்கிரத்தில் நமது சாயுச்சிய மடைவாயென்றதுந் தவிர, இந்த சமிவனமும் நமது புராதன ஸ்தலமானபடியால் இந்த பற்பூரவனத்தில் யெனது தலம் மகா விசேஷமாய் விளங்கும்படி செய்வதற்கு காரணமாக யெனது பத்தனும் பிரமா புத்திரனுமாகிய வசிட்டனென்பவன் வருகின்றான் அவனுக்

கோ இப்போது நிமிச்சக்கரவர்த்தியின் சாபத்தால் விதேகியாய் வாசிரூபத்தோடு தனது பத்தினி வடமீனாள் சகிதமா யிவ்வாரண்யம் வருகின்றான். ஆகிலும் நிமிச்சக்கரவர்த்தியோ அரிதாகிய வெனது பக்தனுடை சாபம் கொடிதாகினும் இவ்வாரணியத்தை உத்தேசித்து வருகிறபடியால் நங்காரணமா இன்னுந் துவாதச வருடம் வரையில் யிந்தக் காற்றின் ரூபமாகவே யலைந்தும் நிருமய நம்மிட சமிவனம் வருங்கால் விதேகம் போய் சுய தேகம் வந்தும் நமதாலயம் சிறப்பிக்கும் கற்பினுக் கினியாளாகிய வடமீனாளைப் புனர் விவாக முடித்தும் சாஸ்வதமான நமது பதமடைவானென்று திருவாக்கினால் உத்திரவளித்து அதோ யிருக்கின்ற சமிவனத்திலங்கும் லிங்கத்தில் அயிக்கியமானார் யென்றும ஆகையாற்றான் உமது நாமகரணம் யாமறிவோமென்று கண்ட சொற்பனத்தின் மகிமையைக் கூறினானென்று சௌனகாதி மகாரிஷிகளுக்கு உள்ளங் கனிந்து சூதபிரான் சொல்லலாயினார்.

வசிட்டர் விதேகமுற்றச்சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது

# வசிட்டர்சுயதேகம்பெற்றசருக்கம்.

---

விருத்தம்.

மாதவம்புரியும் வசிஷ்டருந்தேக
மாறியகாற்றுருவாயிப
பூதலயோகிசொற்பனங்கேட்டுப்
புக்கினனொவ்வழிக்கண்ணண்
மாதருந்ததியாள்செய்திடும்யோக
மகிமையாமறிந்திடுமவண்ணம்
சூதமாமுனியையென்றடிபணிந்து
தோத்திரஞ்சொலினர்பூசுரரே.

இப்படிக்கு யோகீஸ்வரர் வினவக்கேட்ட விதேகவசிட்டருய யோகியினிடத்தில் விடைபெற்று தனது பத்தினியாகிய தன்மிஷ

டையை நோக்கி இத்திபாரண்யம் அருணாசல ஈசுவரனைநோக்கி அரியதவமியற்றுவாய் நானும் வெளியிற்சென்று பலக்ஷேத்திரயாத்திரைபண்ணி பன்னிரண்டுவருஷமுந் தொலைத்து இந்தக்ஷேத்திரம் வருகிறேனென்று காற்றுரூபத்தோடு பிறப்பட்டு மலைகெவி, வனாந்தரம், கிராமம், பட்டிணம, சிவக்ஷேத்திரங்கள், விஷ்ணுஸ்தலங்கள், மகாதீரம், வாரணாசி, கன்னியாகுமரி, குடகு, கொச்சி, கேரளம, வங்கம், கலிங்கம், துளுவம், மாராஷ்டகம், கன்னடம், தெலுங்கம், துருக்கம் இன்னும் பலானதேய சஞ்சாரங்களும்செய்து இந்த சமிவனக்ஷேத்திரம் வந்துசேர்ந்தார். வருஷமும் யோகியுரைத்தபடி பன்னிரண்டாகினது. இந்த ஸ்தலத்தில் வந்தவுடனே தனது காற்றுருவம்நீங்கி சுயஸ்ரூபம்வந்துவிட்டது. சுயதேகமோ, முன்னிருந்த தேகத்தில் நின்றும் கோடிசூரியதேயசும் பிரமானுஷ்டானமான அங்கமும் வசிட்டரிவர்தானோ அல்லவோவென்று தானே சந்தேகிக்கும்படியான லக்ஷணத்துடன் தனது பத்தினியாகிய அருந்ததி தவஞ்செய்திருக்கின்ற தியாரணியம் சென்று பத்தினியை நோக்கினர். அருந்ததியோ தான்செய்கின்ற தபோமகிமையால் விளங்குமபடியான தேசவானதுகண்டு நமது பத்தினிதானோ அல்லது பராபரைதானோவென்று பிரமித்து கிட்டநெருங்கி சிவநாமாவளிஸ்தோத்திரங்கூறினர். வடமீனாளாகிய தன்மிஷ்டையானவள் தவத்தை நீக்கி பவத்தைப்போக்கி தலைவனை நோக்கி தொனியினாலிவர்தான் வசிட்டரென்றறிந்து வந்தனைபுரிந்து சிந்தையுண்மகிழ்ந்து சென்ற விர்த்தாந்தங்களையும் கேட்டு இந்த ஸ்தலத்தின் மகிமையைக்கண்டு சுயதேகமவந்ததால் ஆனந்தங்கொண்டு தானைசொல்லிய தலம் சமிசென்று சங்கர சம்போ தயாளுவேயென்று தன்மனையோடு தவசதினின்று ஆஹா இப்பேர்ப்பட்ட திவ்யக்ஷேத்திரமோ வனமாகவிருப்பதென்று கண்ணுற்று இந்த க்ஷேததிரததை யாம் பக்திசிரத்தையுடன் சிறப்புடன் பிரதிஷ்டைசெய்து பூசிக்கவேணுமென்று பத்தினியுடன்வினவியும தேவபதியில் வசிக்கும்படியான மகாரிஷிகளாகிய சத்தரிஷிகளையும் தியானமாக நினைக்கவே கஸ்யபர், அத்திரி, பரத்துவாசர், விஸ்வாமித்திரர், கௌதமர், ஜமதக்கினி தான் நீங்கலாக மற்ற சட்டரிஷிகளும் இவரதுசிந்தனையோர்ந்து வந்திறங்கினார். அப்படி வந்திறங்கிய ஸ்தானமோ சமிவனத்திற்கு அக்கினிபாகத்தில்

நான்குகடிகைதூரத்தில் ஓர் சிவலிங்கத்தை அந்தஸ்தானத்திற் கண்டு பூசித்தபின் வசிஷ்டரிடம் செல்வோமென. வந்திருப்பதை வசிட்டரறிந்து யாமும் அவ்விடம்சென்று சிவத்தைப்பேணி தவத்தைநச்செய்வோமெனச்சென்று மற்றும ரிஷிகளைக்கண்டு ஒருவர்க்கொருவர் வந்தனைசெய்து ஆசிகள்கூறி ஆங்கிலங்கும சிவலிங்கத்தையும் சப்தரிஷிகளும் பூசித்து சமிவனம் வந்தனர்களாம். அந்த ஸ்தானமானது இப்போது கந்தரிதந்தமென்பதே சப்த்தரிஷிகளு நந்தியஸ்தானமென்பது பின்பு அமுர்தபுட்கரணியின் சமீபத்தில் தபோநிஷ்டராய் விளங்கும் ஸ்ரீமந் பாரசமுனிவரும தனது பௌத்திரராகிய வசிட்டரும விதேகமாகச் சாபம்வந்ததும் பின்பு தாதையிடம் சென்றதும் பத்நினியுடன் பிராணயம் வந்ததும், யோகியைகண்டதும் பத்நினியைவிட்டுத் தான் பன்னிரண்டுவருடம் தேயசஞ்சாரமாய் காற்றுருவத்துடனலைந்து திரும்பவும், சமிவனம்வந்ததும், வேற்றுருநீங்கி சுயதேகம்வந்ததும் தேவுலகிலிருந்து சவுடரிஷிகளும் வந்ததும், வசிட்டரெதிர்கொண்டு சப்தரிஷிகளுமாய் ஆக்கினிபாகத்தில் கபிலர் பூசித்த சிவலிங்க பூசனை சப்தரிஷிகளுமுடித்துக்கொண்டு சமிவனம்வந்த வரலாற்றையுணர்ந்த பிதாமகனை பாரசமுனிவரும் பௌத்திரனாகிய வசிட்டரைப் பார்க்க விருப்புற்று சமிவனம்வந்தார். அப்படிக்குவந்த ஸ்ரீ பாரசமுனிவரை வேதபாராயணத்துடன் வசிட்டரு மற்றுமுண்டான ரிஷிகளும் யெதிர்சென்று அகமுகமலர்ச்சியோடுகண்டு நேராகப்போய்நின்று பத்மதளங்கைக்கொண்டு மூதாதையின் பாதத்தில் அருச்சனைசெய்துநின்ற வசிட்டரை இரண்டு கரங்களினால் தழுவி ஏ குழந்தாய்! இச்சமிவனத்திற் க்ஷேத்திரமென்றதுணர்ந்து நிசதேகம்வரும்படியாய் யாதொரு சாக்ஷாத் உமாபதியருளைப்பெற்ற வுனது பாக்கியமே பாக்கியமென்று பரவசங்கொண்டு மகிழ்வுற்றபிதா மகனுக்கு ஆசனமுதவி யெழுந்தருளுவித்து சோடசவுபசாரங்களு நடாத்தியபின்னர் இவ்வியப்பையும் சமிவனத்தில் க்ஷேத்திரமகாதநியத்தையும் வசிட்டரது விர்த்தாந்தங்களையும் அறிந்து நாற்பத்தெண்ணாயிர ரிஷிகள் முப்பத்துமுக்கோடி தேவர்கள், கின்னரர், கிம்புருடர், சித்திவித்தியாதார், கருடகாந்தருவர் தும்புருநாரதர்முதலாகிய சமஸ்தமான தபோதனர்களும் வேதகோஷ்டிகளுடன் ஆசி கூறிக்கொண்டு இச்சமி

வனத்தின்கண் சோதிலிங்க சன்னிதானத்தினிடம் விளங்கும்படியான வசிட்டமகாமுனிவருடைய சமுகத்தில் வந்திறங்கினார்கள். அப்படிக்கு வந்த சர்வத்திராளுக்கும் முகமன் வரன்முறையாகிய உபசாரத்துட னிருந்தியும், பின்பு பற்பூசகானேசராய் விளங்கும்படியான ஈச்சுரனை பூசை செய்யும்பொருட்டாய் தனது பஞ்சதாருவுங்கு நிகரான காமதேனுவை மானஸ்யமா தியானித்தார். வேதவித்துவான வசிட்டமகாமுனி அப்படிக்கு நினைத்தமாத்திரத்தில் விண்ணுடாகிய பொன்னுலகத்திற் கற்பகத்தருவில் வசிக்கும் சர்வதேவதைகளுக்கும் நிக்கிரானுக்கிரகங்களை இமைப்போதி லளிக்கும்படியான பஞ்சரூப லக்ஷணத்தோடு விளங்கும்படியான காமதேனுவும் சமிவனத்தில் வசிக்கும்படியாகிய சர்வநபோதன ரிடமா விளங்குகின்ற அருந்ததி கேள்வனாகிய வசிட்டமகாரிஷி முன் வந்தது. இப்படிக்கு காமதேனுவும் வந்தவுடனே, பொதிகாசல முதலிய கிரிவாசிகளாகிய மகா சித்தர் முதலானவர்களும் வசிட்டருடைய விர்த்தாந்தங்களை கேள்வியுற்று சமிவனேசனையும் பூசிக்கும் பொருட்டாய்க் கருதி தேவலர், பயிலவர், அசிதர், சுமந்திரர், சுமதி, ரோமசர், கோவலர், ஆங்கிரசர், பிருகு, கார்த்தியாயனர், சைப்பியர், ஜாபாலி, சரபங்கர்செயமுனி, பர்வதர், சுஜிஷ்ணர், அகஸ்தியர், துருவாசர், அரிதரர், சங்கரர் முதலான பிர்ம ரிஷிகளும் சமிவன க்ஷேத்திரத்தில் வசிக்கும் வசிட்டரிட மனுக தண்டஞ் சமர்ப்பித்து ஆசனமளித்து சோடசோபசாரங்களுட னிருந்தி தனது மகா புண்ய சொரூபியாய் விளங்கும் தேவதா காமதேனுவை நோக்கி, ஓகோ புண்ய சொரூபமே யான் சாட்சாத் பரமசிவனது தேவாலயப்பிரதிஷ்டையுடன் பூசை செய்யும்பொருட்டும், பின்னும் செய்கின்ற யாகத்திர்க்கும் அவைகளுக்காக இத்தலத்துக்கு வருகின்ற ரிஷி முனி புங்கவர்களுக்கும் அர்க்கிய பாத்திய ஆஜ்மநீயங்கள் முதலிய யாகத்திற்காகிய திரவிய சாமக்கிரியங்களுக்கும் ஆகாராதி முதலிய பொருள்களுக்கும் யெச்சமயத்தில் யான் உன்னுந் தருணங்களில் மேற்சொல்லியபடி அவைகளை இயாதொரு தடையில்லாமல் அளிக்கவேணுமென்று முன்னமே யுனக் கறிவித்தோமென, முனிவனுரைகேட்ட காமதேனுவும் ஓ பிரம சொரூபமாய் விளங்கும் வசிட்டமாரிஷியே! உமது ஆக்ஞைப் பிரகாரம் யெக்ஷணம் யெப்

பொருளுன்னினும் அப்பொருளப்போதே யளிக்கஸித்தமாகக்காத்திருக்கிறேனென்றதுவை சௌனகாதி மகாரிஷிகளுக்கு சூதபுராணிகர் சொல்லினார் என்றவாறு.

வசிட்டர் சுதேகம்பெற்றசருக்க முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது

# வசிட்டர்பிரதிஷ்டைசெய்த சருக்கம்.



விருத்தம்.

அலைசுற்றுமுலகத்தி னிலைபெற்றகலைகற்றவறிஞோர்களில்
தலைபெற்றவதிபத்தருலைவற்ற மிகுசுத்ததவமேலுளாய்
மலையுற்றமிகுசித்தரடி நித்தமகலாதுவாழ்த்தும்பிரான்
தலமுக்யசமிவிர்க்ஷவனமத்தி யுறைநேர்மைசாற்றென்றரோ.

ஓ சௌனகாதி மஹாரிஷிகளே இனி நடாத்தும் கதையைப் பக்தி விநயத்தோடுங் கேட்பீராகவென்று சூதபுராணிகர் சொல்லுவார். இப்பேர்ப்பட்ட மகாக்ஷேத்திரமான சமிவனத்தில் வந்திருக்கின்ற மாரிஷி தபோதனர்களையுங் கண்ணுற்ற வசிட்டரானவரை வந்திருக்கின்ற தபோநிதிகளாகிய மகா முனிவர்களை நோக்கி, ஆகம சூத்திரங்களுங் கிசைய திதி, வாரம், நட்சேத்திரம், லக்னம், யோகம், கரணங்களுங் கூடின சுபதினத்தில் சங்கற்பங்களைச் செய்வித்து வீபூதி கண்டருத்திராக்க மாலிகாபரணமிலங்க நித்ய கன்மானுஷ்டான செபதப பஞ்சாக்ஷரங்களையும் முடித்துக்கொண்டு மகா சிரேஷ்டமான முகூர்த்தத்திற் பற்பூரகானேசனை பூசிக்கவேணுமென்ற அபேக்ஷமிகுந்த கிருபையோடு ஈஸ்வர பூசாகைங்கிரியங்கண்முதலானநிவேதனாதிகளைக்குறித்துகாமரூபியான காமதேனுவை நோக்கியவுடனே அபிஷேகாதிகளுக்காகிய சர்வவஸ்துக்களும் சுகந்த கதம்பகஸ்தூரி புனுகு சவ்வாது திரவியங்களும் பீதாம்பர பட்டுவர்க்கமுதலிய வஸ்திராபரணங்களும் மல்லிகை, முல்லை, இருவாக்ஷி, சண்பகம், ரோசாமுதலிய சுகந்த

பரிமளகமளீகரம் நிறம்பிய மதுக்கனிறைந்த பலவிதபுட்பாதிக ளும் சோடசோபசாரங்கண்முதலிய பற்பல சுவர்ணபாத்திராதி களும் பிரமரிஷிமுதலாய தபோதனர்களுடைய வினியோகங் களுக்காகிய பற்பல விசித்திர அன்னபானாதிமுதலியவும் பச்சைப் பூரமுதலிய வாசனைதங்கிய தாம்பூலாதிகளும் யிப்படிக்கு நானு விதமான பற்பலவஸ்துக்கள் யாவும் இன்னமும் வேண்டுமென்று நினையாதவண்ணமாகத்தானே பஞ்சவிலக்ஷண காமரூபியாகிய காம தேனுவும் கணைப்போதில் அமைத்துநின்றன. கண்ணுற்ற சர்வ யோகீஸ்வரர்களுங் களிப்படைந்த பின்னர் மகா வேதபாராயண தபோதனர்களுடனே வசிட்டமகாமுனிவரும் யெழுந்து சமீவனத் திலிருக்கும் சோதிலிங்கமயமாகி விளங்கு சந்நிதானத்தில் வந்து ஆங்கிருக்கும் பலானவிருக்ஷாதிகள் புற்பூடுமுதலான வனங்களை தேவகன்மியனால் சேதனஞ்செய்து சமபூமியாகத் திட்டம்பண்ணி காராவிநீரால் மந்திரபூர்வமாகச் சுத்திசெய்து வந்த தபோதனர்கள் யாவருக்கும் ஆசனமளித்து அவரவர்களும் பத்திவிநயத்துடனே வேதகோஷ்டிகளுடனே வீற்றிருக்கச்செய்து அரம்பைமுதலிய ஸ்தம்பங்களுமமைத்து மகுடதோரணாலங்கிர்தம் பூரணகும்பங்கள் கதம்பகஸ்தூரிகளினால் பஞ்சகோலங்கள், தோரணதீபங்கள், சந்த கிர்த்தூமங்கள், செந்தழற்குன்றங்கள், யாகசாலைகள், யோகமே டைகள் தீரபுட்கரணிமுதலானதுமமைத்தும் பஞ்சகோலங்களினால் நவதானியங்களடைத்தும் சூத்ரவேஷ்டிதம்செய்த கும்பங்களுக்குங் கந்த புட்பங்களால் அலங்கிர்தஞ் செய்து உதகங்களாற் பூரித்து மாவிலை தற்பை கூற்சம் நாரினங்களாலும் வஸ்திரப் பிரதமைகளா லும் அலங்காரம் செய்து ஆங்கிருக்கும் ரிஷி கோஷ்டிகளால் வே தபாராயணங்கள் செய்யவும் பிரம ரிஷிகளால் சதுருத்தரமென் கின்ற வேத மந்திரங்கள் செபிக்கவும் மகாவேத மந்திரங்களினால் புட்பாதிகளாற் பூசித்தும் தேவதா வாத்தியங்களாகிய நாற்கருவி நரம்புக்கருவி தோற்கருவி துளைக்கருவி மிடாக்கருவிகளாகிய பஞ்சவாச்சியங்களும் பேரிடிபோற் குமுறவும் கருவேலென்னும் பற்பூர விருக்ஷத்தின் கீழிலங்கும் சோதி லிங்கத்தை அச்சுப முகூர்த்தத்தில் வேதவிதியின் பிரகாரம் பஞ்சாவரணங்களுடன் சங்கற்பமாய் அபிஷேக நடாத்தி, காமதேனுவால் அமைக்கப் பட்ட சர்வசோடசோபசாரங்களும் புரிந்து, பஞ்ச பக்ஷண சட்ட

ரச பலவித வர்க்கங்கள் நைவேதன முதலிய தூபதீபங்களியற்றி அன்றலர்ந்த புட்பாதி வில்வதளங்களினுலும‌ருச்சித்து பச்சைப் பூர ஆர்த்திகளெடுத்து சத சகஸ்திர நாமாஸ்தோதிர பாராயணங்களுடன் சர்வ ரிஷி தபோதனர்களுடன் வசிட்டரும் தனது கரத்தை சிரத்தின்மேற் கூப்பி தேகப்பரவசமாய் பொறிபுலன்களெலா டுங்கி காணுதி தத்துவங்களுமோய்ந்து சொருபதியனுராய நின்றும் மற்ற ரிஷிஸ்வராளால் பற்பல ஸ்தோதிரமுர்தங்கள் சாற்றினர் தேவர்கண் மலர்மழைதூற்றினர் சர்வதேவதைகளும் ஈசனைப் போற்றினர் யிப்படி நின்றும் வடமீன் அருந்ததிகேள்வனுகிய வசிட்டரும் ஈஸ்வரனது திருவருட்கன் புருகிஸ்தோத்தரிக்கின்றனர்.

விருத்தம்.

குன்றமெனு மருணைதனிலேனமனந்தேடவுழற்
கொழுந்தாய்மேவி
நின்றபெருஞ் சுடர்மணியேகருவேலின்கிழமர்ந்த
நிதியேகல்லால்
அன்றமர்ந்து நால்வருக்கு மறமாதிமறைமுடிவை
அருளினுற்போல்
இன்றெனக் குன்னருளீய்ந்தாய் இனியெனக்கென்
குறையுமுண்டோ யிறையேபோற்றி.

ஏ அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகா, ஆதிரெக்ஷகா, பரிபூரண சச்சிதானந்தா, காளகண்ட திரிநேத்திரா, சந்திரார்த்த சூடாயா, சதாசிவாயா, சாம்பாயா, லட்சுமிபதேசேவிதாயா, பக்த்தானுரக்ஷாயா, மகேசிவாயா, தியாகராஜாயா ஓம் நமசிவாயா அரவாபரணு, காலகாலா, கருணுகரா, சர்வேந்திரியாமி, சனுர்த்தனுதிபதே, சம்போசங்கரா, கௌரிமனுேகரா, கங்காளபிக்ஷாண்டா கைலையாளி, விஸ்வேசா, வீரமார்த்தாண்டா, அனுதரக்ஷகா, யேளைபங்காளா, அரஹரா சுயம்புவே அடியார் மனோகரா, கருவேலெனும் பற்பூரகானேசாவென்று யின்னும் பலவித ஸ்தோத்திரங்கள் செய்து தேகமறந்து ஸ்தம்பித்து நிற்கும் காலையில் இயரொரு ராட்சாத மகேஸ்வரனுனவர் ரிஷபவாகனரூடராய்

உமாசகிதராய் கணேசர் முருகக்கடவுளுடனே நந்தி பிரமத கணங்களுடன் பிரத்யக்ஷமாகி முனிசிரேட்டாள் மத்தியின் விளங்கா நின்ற வசிட்ட மகாமுனியை நோக்கி ஈசரன் கூறுவார்.

விருத்தம்.

கமலமீதொளி ராயிரந்தெரட்டார்கதிரிதமாகிய தண்
கமலமீதுறை வோனருள்சேயனேகதிரிலை யாய்ந்தெழிலங்
கமலமுன்றகற்றிடுபுலநதியன்மொழிகவர்ந்தருபோவங்
கமலதேகியும பெற்றவாமாதவக்கற்புராட் கதிபதியே.

ஓ மலராசனன் புத்திரனாகிய அருந்ததி கேள்வனே கேட்பாயாக. யாம உன்னாற் செய்யப்பட்ட சர்வ கைங்கிரியாதிகளினாலும தபோமகிமையினாலும் மற்றும பராசரரிஷி முதலாய பிரமமரிஷி முனிவார்களது அனுஷ்டான மோன நிஷ்டைகளினாலும் பின்னும உனது திவ்யானந்த ஸ்தோத்திரங்களினாலும உள்ளங்கனிந்து, பள்ளங்கண்டோடுகிய வெள்ளம்போலும உள்ளபடியே நேரிற்பிரத்யக்ஷமாகினோம ஆகையால் உனக்கு வேண்டிய வரங்களை வினவென இயாதொருகருணைமுகூர்த்தமாய்ப் பிரகாசிக்கின்ற சாட்சாத் கருவேலனின்கிழிலங்கிய உமாபதி கேட்க அப்படிக்கேட்ட வசிட்டரும் அதிபக்தி விநயத்தோடும் ஆஹா, சர்வலோக பூதங்களுக்கெல்லா நாதனாகிய காரணா, அகண்டபரிபூரணா, சர்வ சாட்சியாயும் விளங்கிய வுதாரணா, வதீனதயாளுவே உனது திவ்யஸேஷத்திரங்கண்டக்ஷணமே அடிமையினது கொடிய சாபத்தினின்று விடுபட்டு விமுக்தனாய்கிர்தார்த்தனாகிய அடிமைக்கு இயாது வரம வேண்டுவேன், திருவிரகத்தைக்கண்ட பேழையாகிய தமியேனுக்கு மறுவரம் இயாது வேண்டும், ஓ ஸ்வாமின் ஆகையாலொருவரம் வேண்டின இயாதெனில இந்த க்ஷேத்திர மூர்த்தி தீர்த்தங்களை யெவரேனும் பக்தி விநயத்துடன் வந்தடைவார்களோ அவர்களுக்கும் சர்வபாபங்களும அகமாகியும்நினது பதவியருளவேண்டுமென்று கேட்ட வசிட்டரை நோக்கி ஆனந்தித்து ஆஹா இதுமுதல உலகுள பரியந்தம இந்த க்ஷேத்திரத்தில் வந்தும பக்தி விநயத்தோடு பிரயத்தில் மூழ்கி சேபாராப் பூசிப்பவர்களெவரேனும அவர்களுடைய பஞ்சபாதகங்களாகிய

# தீர்த்தமகிமை.

## ஆசிரியப்பா.

பொய்யுடன் சூது புலைகொலை காமம்
செய்திடுகாவல் திருடலங்கொளல்
சாத்திரநீதந் தவறியபழிஞர்
கோத்திரநீக்குங் கொடும்புலையாளர்
பசுசிசுவாதை பண்ணினபாதகர்
உசிதமிலாதவை யொப்பியசிறோர்
தேவங்களிலையெனச் செப்புநாஸ்திகர்
பாவமேதென்றுபெண் பழிபுரிந்தோர்கள்
ஊர்வனம்பக்ஷிமா வொழித்திடுங்கொலைஞர்
சேர்வதின்முறையிலாத் தீயசண்டாளர்
அந்தணர்முனிவ ரறிஞரைப்பழித்தோர்
தந்திரச்சாலச் சமத்தழிவழுக்கோர்
தென்புலத்தார்க்கறஞ் செய்திடாத்தீயர்
மன்கடன்றேவை மறந்துண்ணுமாந்தர்
செய்கையாற்பூர்வச் செயலினன்மெய்யில்
ஐயுறுந்தீநோய் அடைந்திட்டவஞ்சகர்
குட்டமோடீளை குலைத்திடுஞ்சயநோய்
நட்டமாயொட்டிய நாவாக்ஷிச்சுரம
மண்டைநோய்சூலை மாறாப்படுவன்
தொண்டையினிரணந் துடைவாளைகண்ணோய்
வாதபாரிசம் மலிசித்தபிரமை
சீதமூட்குன்மம் சிலந்திகாமாலை
தந்தநோய்நாளம் தாங்கொணாப்பித்தம்
அந்தமில்விஷநோ யாகியவெதவையும்
தீராய்வலிப்பு திரிதோஷமாந்தம்
பாராததானப் பலவுளட்கட்டு
வாதமெண்பதினால் வந்திட்டரோகம

சாதகத்தடங்கா சனிபதின்மூன்றும்
பித்தநாற்பதினாற் பெருந்திட்டபிணியும்
குத்தஞ்சிலேத்மங் கொடுதொண்ணூற்றாறும்
சூலைபத்தாறு தொகுத்தநான்குளதும்
வாலையாமண்ட வாதநோய்பத்தும்
மகவிலாக்கொடியர் மலட்டுநோயெட்டும்
தொகைதனிலடங்காத் துர்வியாதிகளும்
போராற்பகையாற் பொருந்தியமிடியும்
தீராதவினையெலாந் தீர்க்குமித்தீர்த்தமே
நம்பிக்கைத்துரோக நவிலொதணரிதே.

ஓ வசிட்டரோ ஆனால் இந்த க்ஷேத்திரத்தில் வந்து பூசித்து மண்டலம் இத்தீர்த்தத்திற் றோய்பவர்களுக்கு நம்பிக்கை துரோகம் ஒன்று நீங்கலாக மேற்கூறிய பற்பலவினைகள் யாவும் அங்கியிட்ட பஞ்சுபோலாகுமென்று இயாதொரு பிரமசோதியாகிய சிவ பெருமானது திருவாக்களித்தும் அக்ஷேத்திர தீர்த்தநதிக்கு அநேகவரங்களீய்ந்தும் தன்னெதிர்நிற்கும் ரிஷிகுமாரர்களின் மத்தியிற் பிரகாசிக்கின்ற தன்மிஷ்டையுடனுளனாகிய வசிட்டனை நோக்கி, நீ பெற்ற பேறே பெரும்பலன் யேனெனில் எனது பூரணகடாக்ஷம் நீயே நேரிற் பெற்றபடியாலும் இத்தலத்தில் சர்வதபோதனர்கள் சூழ, வேதவிதிப்படியே உனது பூசை யாம் யேற்றபடியாலும் உன்னுமமே யாமாகி இத்தலத்தில் யென்றும் வசிப்போமெனவும் கற்பிற்சிறந்த அருந்ததியையும் நோக்கி வசிட்டர் விதேகமாகி சின்னாட்சென்று தேகம்பெற்றபடியால் புனர்விவாகம்செய்துகொண்டு இத்தலஞ்சார்ந்த ஆறுதலங்களிலும் பிரதக்ஷணமாதரிசித்து இத்தலத்தில் வந்து எமதாலயத்தையும் நூதனமியற்றி பிரதிஷ்டைசெய்து யெமது தலத்தின்கண் தக்ஷணாமூர்த்தி பக்கத்தில் உமது பத்தினியுடன் தபஞ்செய்து நமது சாரூப்பியத்தை அடைவீர்களென்று மலைமகளாகிய பிரகநாயகி சகிதமாய் சோதிலிங்கத்தினிடம் அயிக்கியமாயினார்யென்று சௌனகாதிகளை நோக்கி சூதபுராணிகர் கூறுவார்.

பிரதிஷ்டைச்சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

# பத்தாவது

# வசிட்டர்கல்யாணச்சருக்கம்.

கலிவிருத்தம்.

இந்தப்பா ரிதழியா முடித்தவேணி
இறையும்வசிட் டேசனென வியம்பியாங்கு
வந்தப்பான் மணஞ்செயென வரமீந்தாண்ட
மாசரிதை கேட்டுமுனி வரர்களெல்லாந்
சிந்தப்பாற் புரண்டதென மகிழ்ச்சியோங்கிச்
சிவசிவாவெ னக்கணினீர் ததும்பத்தேம்பி
அந்தப்பா மாலைகொளும் வடமீனுட்கு
அருமாலை யணிந்தகதை யறைமினென்றார்.

ஓ இச்சரிதையை இன்பத்தோடு அன்புருகச் செவிமடுக்கு நன்புக் கிசைந்த அன்பராகிய சௌனகாதி மகாரிஷிகளை நோக்கி, பூதபௌஷ்ய வர்த்தமானங்களும் ஓர்ந்த ஸ்ரீமத் சூதபுராணிகர் சொல்லுவார் ஓ நைமிசாரண்யவாசிகளே கேட்பீர்களாக பின்பு வசிட்டமகாமுனிவரானவர் ஆங்கு சமிவனக்ஷேத்திரத்தி லெழுந்தருளிய பிரமரிஷி முதலாகிய சர்வத்திர ரிஷி தபோதனர்களுடன் தர்மிஷ்டை சகிதமா யெழுந்து பூர்வம் இயக்கர் கோனாகிய குபேரனாற் பிரதிஷ்டை செய்திருக்கின்ற அழகிசர் அமலாம்பிகையாய் விளங்கிய திவ்ய க்ஷேத்திரமடைந்து கஸ்யப மகாரிஷியாற் பூசிக்கப்பட்ட மயேஸ்வரனையும் சகல முனிவோர்களும் அஞ்சலித்து நானாவித புஷ்பங்களால் அருச்சித்து சோடசோபசாரங்களுமியற்றி மதுமாதமென்ற வைகாசிமாதத்தில் சுக்கிலபக்ஷம் பஞ்சமிகூடிய பிரமநட்சேத்திரமென்னும் ரோகணி நட்சேத்திரம் பாலவாகரணம் சித்தநாமயோகம் கடகவோரை கூடிய சுபமுகூர்த்தவேளையில் காமதேனுவா லளிக்கப்பட்ட சகல சாமக்கிரியாதி பற்பல ஐஸ்வரியங்களுடன் மகா தவமுனிவர்களால் யெக

ஞாதிகளுஞ் செய்ய சோடச பூரண கும்பங்களமைத்து பந்தன் முதலிய மகாதோரணங்களும், ஆலவட்டம், சாமரை, பஞ்சவர்ண முத்துக்கவிகை, சுருட்டி, இடக்கியம் முதலிய விநோத வைபவத்துடனே வேதவீதியின் பிரகாரம் வடமீனுளெனுங் கற்பிற்சிறந்த சிற்பனநிறைந்த அற்புதமுயர்ந்த சர்க்குணம்பொருந்திய தவசிகாமணியான அருந்ததியையும் வேதோத்தமனுகிய ஸ்ரீமத் வசிட்டமகா முனியையும் சிவகளை யிலங்கும்படியாகிய அலங்காரஞ்செய்து யெக்ஞபூர்வமா இலங்கிய மகா ரிஷிகளால் வேதகோஷ்டத்துடன் வதுவை முடிந்து பஞ்சவாக்கிய முழங்க அந்தரத்தில் சர்வ தேவதைகளும் புட்பமாரி சொரிய துந்துமியாற்பரிக்க துடிவாணம் இடிவாணம மிடாவாணம் முதலிய பற்பல வாணங்க ளாற்பரிக்க பதினெண் வாத்தியங்கள் சப்த்திக்க நவரத்தனகசிதமா யிலங்கும்படியான சிவிகைமேல் வசிட்டமகா ரிஷியொடு அருந்ததியையும் அமைத்து சப்த்ததானமாக அடியிற் சொல்லபோகின்ற ஸ்தலங்களையும் பிரதக்ஷணமாய் தரிசனஞ்செய்து சமிவனக்ஷேத்திரவந்திறங்கியபின்னர் இச்சமிவனத்தின் க்ஷேத்திரஞ்சூழ மற்றரிஷிகளியாவர்களும் தபோநிஷ்டர்களாயிருந்தனர்கள்: அத்தருணம் வசிட்டமகாமுனிவரும் ஈஸ்வரஆக்ஞையின்படி இவ்வாலயத்தை நூதனமுடிப்பிக்கக்கருதி தேவசில்ப்பியைநினைக்கவே அந்தக்ஷணமே தேவசில்ப்பிகள்வந்து வந்தனை ஸ்தோத்திரம்பண்ணி இயாது உத்திரவென்றுகேட்க சில்ப்பியைநோக்கி இந்த மாக்ஷேத்திரமான சமிவனத்திற் இச்சோதிலிங்கப்பிரதிஷ்டை செய்தோம். நூதன ஆலயம் சிவபெருமானுக்கும் பிரகநாயகிக்கும் விசித்திரமான முப்பிரகாரமதில்களும், நான்கு கோபுரமும, ஸ்வாமின் அம்மன் வசிக்கும் அஸ்தமண்டபம், மகாமண்டபம், மடப்பளி, பள்ளியறைமுதலாகிய தலங்களும் அமைக்கக்கடவாயென்றுக்ஞாபிக்கவே இதைக்கேட்ட சில்ப்பிகளும் அதிபுத்திசாதுரியங்களினுல் சாஸ்திரமுறையின்படிக்கு தேவசில்ப்பிகளால் செய்யப்பட்ட வசிட்டேசரினது ஆலயத்தில் சிறப்பையும் நாளால் வர்ணிக்கவெளிதாமோ அவ்வேதவிதிப்படி லிங்கபிரதிஷ்டைநடாத்தியும் ஆலயத்துள் இன்னும் சில்ப்பிகளால் காமதேனுவாலளித்த தவர்ணாதிலோகங்களினுல் உத்ஸவ விக்கிரகங்களும் சிம்மாதனம் வாகனாதிகள்முதலாகிய ஆபரணாதிகளும் சோடசோபசார பற்பல பணாதி

களும் மடப்பளிக்காகிய பாத்திராதிகளும் அமைத்து வசிட்டமுனியை வணங்கிநின்றார்கள். உடனே வசிட்டரும் ஈஸ்வரகைங்கிரியாதிகள் நடாத்தவேண்டுமென, ஆதிசைவர்களையும் சிருஷ்டித்து பூசிக்கும்படி செய்து தமது பஞ்சாக்ஷரம் சித்தியாகும்படியாகிய யெக்ஞாதிகளும் வேதவிதிப்படி சகல யோகீஸ்வாராளுடன் முடித்து இவ்வாலயத்தில் மகா உத்ஸவாதிகள் செய்யவேண்டுமென. ஸ்ரீபாரசர்முகமா யோசித்து மதுமாதமான வைகாசிமாதத்தி பூர்வபக்ஷம் புனர்வசு நட்சேத்திரத்தில் துசாரோணமியற்றி யதுமுதல் தசநாள்வரையிலும் ஆகமவிதிப்படியே வாகனாதி உத்சவங்களும் தீர்த்தோர்ஸவங்கள்வரையில் ஈசுர ஆக்ஞைப்படி நடாத்தியபின்னர் தமதுபத்தினிசகிதமா அவ்வாலயத்துள்ளாய் விளங்குகின்ற தக்ஷிணாமூர்த்தத்தின் சமீபத்தில் வசிட்டரிஷியானவர் மோனநிஷ்டையிலிருந்தனர். பின்னர் சந்திரசாபமும் இத்தலத்தில் வந்து தீர்ந்ததென்று சௌனகாதிமாரிஷிகளுக்கு சூதபுராணிகர் சொல்லினார்.

வசிட்டர் கலியாணச்சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

பதினேழாவது

# சந்திரன்சாபமுற்றசருக்கம்.

விருத்தம்.

மந்தமாவுலவுநைமிசாரணிய
மாதபோதனருளமகிழ்ந்து
கந்தரப்புலமைச்சூதமாமுனிதா
டொழுதுமாமலர்சொரிந்தெங்கள்
சிந்தைதேவேறுகாதாலுடாதை
செலுத்தியாட்கொண்டதேசிகனே
சந்திரன்சாபமுற்றதுந்தீர்ந்த
தகமைகூறெனவியந்தனரால்.

ஓ சௌனகாதிமாரிஷிகளே! இந்தக் கதாசாரத்தைச் செவிப்புலனோடு மனக்களிப்புறக்கேட்கின்ற நைமிசாரண்யவாசிகளே கேட்பீராக. இராதந்தர கற்பகாலத்தில் கிரேதாயுகத்திலே பிரமபுத்திரர்களில் காசிபமகாரிஷியால் சிருஷ்டிகிர்த்தியம் நடத்திவந்த பின்னர் தட்சப்பிரமாவென்றவர் ஓர் பிரமாவாகவிருந்து ஜீவசிருஷ்டி செய்துவருங்காலையில் அவரோ இருபத்தெட்டுப் பெண் மகவுகளையும் பெற்றார். அவர்களில் சேஷ்டபுத்திரியாகிய தாட்சாயணியென்ற வோர் கன்னிகையை யாதொரு சாட்சாத் ஈஸ்வரனுக்கு விவாகஞ்செய்துகொடுத்தும் மற்ற இருபத்தேழு கன்னிகைகளையும் பிதாவாகிய தக்ஷபிரமாநோக்கி ஏ கண்மணியாகியபெண் மணிகளா! உங்களொங்கண் மனோபேஷ்டமான புருஷனை நன்றாயோசித்து வென்னிடஞ் சம்பாஷித்தால் வினவிய இச்சையின்பிரகாரம் விவாகம் நடாத்திவைக்குகிறேன் வென்று பிதாசொல்லிய மொழியைக்கேட்டு தங்கள் தங்கள் கூர்ந்தபுத்திகளினால் ஒவ்வொரு புருஷர்களையும் உத்தேசித்து ஒருமனம்போலே சரிப்படாமல் சின்னாட்சென்று இவர்களொருங்காய்க்கூடி ஓரிரவிற் பூரணச்சந்திரன் ஒளிர, இழங்தென்றல்வீச, கோகிலங்கூவும்படியான பூங்காவிற்புந்தி தாதைதவினவிய வசனத்தை யுத்தேசித்து நம்மெல்லோர்களுக்கும் ஓர் நாயகனு மாகத் தக்கபுருஷன் இதோவிளங்கும்படியானசோடசகலைகளோடும் பிரகாசிக்கின்ற சீதளம்பொருந்திய சுந்தரமிகுந்த சந்திரனைத்தவிர மற்றோர் தக்கதல்லவென்று யாவரும் ஒருருதியாய்த் தாதையாகிய தட்சப்பிரமா நேரில் வந்தனஞ்செய்து தங்களுடைய வதுவையின் முடிவாகிய கருத்தைக்கூறினர். கேட்டவுடன் தன்னிதயத்திற்கும்பொருந்தி, ஓகோ நல்லயோசனைசெய்தீர்களென்று புத்திரிகளைக்கொண்டாடி, இந்துநாயகனைப்போலுங்களுக்கு வேறுபதி ஈடில்லையென்று நிட்சயித்து நல்ல சுபமுகூர்த்தநியமித்து சோமனை வரவழைத்து வேதவிதியின்பிரகாரம் இருபத்தேழு கன்னிகையையும் தண்சுடர்க்கிரணனாகிய சந்திரனுக்கு விவாகமுடித்தனுப்பினர். சோமனும் தனது ஸ்திரீகளுடன் தன்னகரடைந்து மின்னார்களினது பள்ளியறைகளிற் றினமொருத்தியினது இஷ்டகாமியபோகங்களை யனுபவித்துவருகின்ற நாளில் அசுபதி, பரணி, கார்த்திகை வரையில் மூன்றுநாளாகியபின்னர் நாலாநாளிரவு உரோகணியினது அந்தப்புரம் வருமுறையானது

10

நேரிட்டது. இப்படிக்கிருக்க உரோகணியின் விர்த்தாந்தமோ உரோகணி ஜனிக்கும்போதேபேடிரூபமானதால் இதை யாருமறியார்கள். தனது நாயகன் இன்று நம்பள்ளியறைக்குவந்து அபமானப்படுவதைப்பார்க்கிலும் வனத்திற்சென்று தவம்புரிந்து சுயவடிவங்கிடைத்தாலன்றி பிராணஹானி செய்துகொள்வது திண்ணமென்றெண்ணி, வனத்திடைநண்ணி, மாயனையுன்னி, அருந்தவம் பண்ணி யிருவிழிதுன்னிப் பகவானை ஸ்தோத்திரத்தெண்ணி நிற்குந் தருணத்தில் தீனதயாளுவானவர் அறிந்து உரோகணி முன் பிரத்யக்ஷமாய்த்தோன்றி இவ்வாரண்யத்தில் நம்மை நோக்கி இப்படிக் கருந்தவம்புரிய காரணமியாதெனவினவ, உரோகணியானவள் ஸ்ரீமந்நாராயணனை நோக்கி ஏ பரந்தாமனே விளங்கிய தீனபந்துவே! தீனதயாளு பக்த்தவச்சலா! கோகுலநந்தா! முகுந்தா! கோவிந்தா! ஸ்ரீஹரிகமலக்கண்ணா! சாமளவர்ணா! எனதுஅண்ணாவென்று தன்னுடைய விர்த்தாந்தங்களை ஆதியோடந்தமா வினவிநின்றாள். இதையுணர்ந்த பகவானானவர் கிருபைகூர்ந்து ஓர் சீதள தடாகமுண்டுபண்ணி இதிற்போய் ஸ்நானம்பண்ணிவாவென்ற அளவில உரோகணியும் தடாகத்திலிறங்கி மூழ்கி நிமிர்ந்தவுடனே கோடிசூரியப்பிரகாசமான தேயசு தகதகவென்றொளிர மலர்மகளாகிய இலக்ஷ்மி வாணி அருந்ததியைப்போல் நிகற்கும்படியாயும் தனது சோதரிகள் இருபத்தேழுபேர்களிலும் சகஸ்திரமடங்கு அதிகரூபலாவண்யங்களுடன் தடாகத்தை விட்டுவந்து ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை பலவித ஸ்தோத்திரங்களினால் நமஸ்கரித்து விடைபெற்று தன்னுடைய பள்ளியறைக்கு நாயகனாகிய நிசிகரன் வருவானென்ற ஆனந்தவிரகதாபத்தோடும் ஆரண்யமத்தியில்வருகின்றதருணத்தில் சந்திரனே, ரிஷபவீட்டில் கார்த்திகையினது நான்குபாகலீலையுமுற்றி அன்று பூரணசோடசகலைகளோடும் உரோகணி ஸ்தானமடையக்கருதி யுதிக்கப்போகின்ற சமயத்தில் இவ்வாரண்யத்திற் பிரகாசிக்கின்ற இலக்குமிபோனுமிலங்கிய சௌந்தரியமான மின்னாளைக்கண்டு பொன்னாளோவென்று, பன்னாசைகொண்டு தன்னாளென்றறியாமல், கன்னிமுன்னாகவந்தான். உரோகணியுங் கண்ணுற்றவளாய்த் தன்னுடைய பத்தாவென்றறிந்து ஆஹா இப்படிக்கும் சந்திரனுக்கு பானரிகவனம் செய்வது வழக்கந்தானோவென்று நினைத்து உள்ளந் திகை

த்து மெள்ளவும் நடந்தாள். சோமனுங் கிட்டநெருங்கி, தொட்டிடத்தியங்கி, கட்டழகினியாள் யெனையிஷ்டமாப் புணர்வாயென்றான். ஓ மன்னா! நானோ கந்தருவஸ்திரீ ஆனால் நீயோ சுந்தரபுருடனானபடியால் உனது இச்சையைப் பூர்த்திபண்ண யெனக்கு, இச்சைதானென்றும் இப்போது நீயோ தேகம் அசியோடிருக்கிறதாயறிந்தேன். நீயும்ஸ்நானாதிகண்முடித்து, ஆசாரபூஜிதனாக வந்தால் சம்மதமென்று வினவியும் ஆஹா நமது நாயகனாகிலும் காட்டினிற் காந்தருவிவாகப்புணர்ச்சி வேதநீதமல்லவே ஆகிலுமின்று நம்மிட அந்தப்புரம் வருவது முறையேயென்றுயோசித்து சந்திரன் ஸ்நானம்பண்ணிவர ஆரண்யத்தில்விலகியவுடனே, உரோகணி தன்னரண்மனைக்கு வந்து யெதாப்பிரகாரம் அந்தப்புரமடைந்தபின்னர், ஸ்நானமபண்ணிவரச்சென்ற சோமனும் வனத்திற்றீர்த்தத்தைத் தேடி, கணப்பொழுதினிலோடி, கன்னியைவிட்டு வந்தோமேயென்று வாடி, மின்னழகே மனநாடி, ஒருமனதாய் வழிகூடி, விஷ்ணுவால் உரோகணிக்கு ரூபமுண்டாகிய தடாகத்தைக் கண்டு அதிவேகமாய்ச்சென்று, நாரணன் றீர்த்தமேயாடினான். சசி, பூரணப்பெண் வடிவாகினான். இப்படிக்காகவே கலாநிதியானவன் வெட்கமடைந்து, மனந்துக்கமடைந்து, உலகிருளடைந்து, சலசந்திரனானவன் தன்னுடைய ஸ்திரீரூபத்தைப் பார்த்துப் பார்த்துக் கூசி, மெய்யானதுவேர்த்து, ஆஹா இதற்கென்செய்வோமென. தன்மச்சினனாகிய விஷ்ணுவைநோக்கித்தியானநிஷ்டராய் நிற்பளவில் லீலாவினோத மாயனுமறிந்து இவன் சந்திரனென்று அறியாததுபோலே ஸ்ரீகோபாலகிருஷ்ணன் சீதளகளப கதம்பகஸ்தூரி பரிமளிக்க இரத்னாபரணாதிகளிலங்க வேய்ங்குழலிசையோசைபிரங்க கபடநாடக சூத்திராவதாரியாகிய ஸ்ரீஹரி முராரியானவர்முன்னிலேநிற்கின்ற மதிகுணநிதியானவனை நோக்கி ஆஹா ஏ பெண்கணாயகமா நிற்பவளாரடி. உனக்கெந்தவூரடி. என்னைகண்ணாற்பாரடி. மோகமாகினேன் சேரடி என்ற மாயன் வசனத்தைக்கேட்டு விதனமேலிட்டு ஏ ஸ்ரீஹரிவரதா! மாயாவினோதா நானோ சந்திரனென்று, நடந்த விர்த்தாந்தங்களைக் கூறவே கேட்ட முகுந்தனும் புன்னகையோடு நீ சொல்வது பொய்யென்று காந்தரு விவாகஞ்செய்யென்று விரகதாபத்தோடு பலாத்க்காரமா மதிகுணநிதியைக் கூடி லீலையில் விளையாடி வீரியமுள்ளிற்பட்டாற்

வெகு காரிய நஷ்டமாமென்றுணர்ந்து பக்கத்திற் பிரகாசிக்கும் ஒரு சங்குக்குள் கலீனமாகிய நாதத்தை வாங்கி, திரைகளைக் கொழிக்கும்படியான சமுத்திரத்தில் வீசி நின்றார். இதைக்கண்ட மதிகுணநிதியும் ஓ நாரணா இதென்ன காரணமென்று ரகசியம் கூறென்ற அளவில் ஆரணமோர்ந்த பூரணன் ஓதுவான். ஏ மதிமுகவதனியே கேட்பாயாக: அயோத்தியாபுரிக்கரசனாகிய திருசங்கென்ற பூபதிக்கு வெகுநாளாகப் புத்திரனில்லாமல் நம்மை நோக்கி, பன்னிரண்டு வருஷமாய் அரிதாகிய தவம்பண்ணுகின்றான் இந்தசாகரத்தினருகில் அவனது ஸ்திரீகளுக்கெல்லாம் ஒரு முனிவன் சாபத்தால் கருவிலாதேவிட்டது. ஆனாலிவனுடைய அருந் தவத்துக்கிரங்கி இப்போது நம்மாற் கூடி சுகித்திடுங் கருவை அவனுக்களித்தோம். வீசிய சங்கத்தோருருவாகிய குழவி யவனிடமணுகும் அவன்றவ மின்றோடே முடிந்தது. சங்கினி லுற்பத்தியான குழவியின் சப்தத்தினாலுணர்ந்து சங்கை அரசன் கரத்தினிலெடுக்கவும், சங்கமுன்வெடிக்கவும், யானும்போய் வரங்கொடுக்கவும் வேணுமென்றதைக் கேட்டு, மதிகுணநிதியும் வியந்து அக்குழந்தைக்கு யாதுவரம் அருளுவீரெனக் கேட்க, ஏ மதிமுகையாளே கேட்பாயாக. இக்குழவி சங்கினி லுற்பவமானதால் சங்குபாலனென்றும் நாம், அரியுஞ், சந்திரனுங்கூடின சுக்கிலசுரோணிதமானதால் அக்குழந்தைக்கு நாமதேயம் அரிச்சந்திரனெனவும் நாமம் வகித்து வேண்டிய வரமுமளிப்போமென்ற கோபால கிருஷ்ணனை நோக்கி, ஏ மாயனே நம்பினோர் சகாயனே எனது பெண்ணுரு நீங்கி தன்னுரு வேண்டுமெனக் கேட்டவுடனே இன்னொரு தடாக முண்டு பண்ணி இதிற்போய் ஒரு கரத்தைமட்டுந் நீரிற்படாமற் தூக்கிக் கொண்டு ஸ்நானம்செய்துவாவென்று சொல்லிய அளவிற் அப்படியே தோயத்தில் ஓர் கரம்படாமல் மூழ்கியவுடனே முன்னிருந்த ரூபத்திலுநின்று பெண்மணங் கழிக காந்தியோடும் தூக்கிய கரத்திற் றொடியுடனிலங்கிய சந்திரனைப்பார்த்து பரியாசம்பண்ணிய விஷ்ணுவை நோக்கி, இடக்கை வளையலழியாதிருப்பதால் இதென்ன, விபரீதம்மென்று அநேகவிதங்களாலதைத்தகர்க்கவேலொன்றினு மழியாமற்கண்டு ஏ முகுந்தா வைகுந்தா இதென்ன காரணமென்று கேட்க ஏ சந்திரா! இப்புராணம் வெளியிட வாணர்க்குதவிய வாசுதேவனது கீர்த்தியைப்போல் என்றைக்கும் நின்னுடைய கரத்

தில் பிரகாசிக்குமென்று அந்தரத்தியானமா திருசங்கு தவத்திடம் சென்றார். சந்திரனுந் தனது ரிஷபவீடாகிய ரோகணி முதற்பா த அந்தப்புரத்திற்குச் சென்றான். அப்படி வந்த நாயகனைக்கண்ட அதிரூபத்தோடும் விளங்கிய உரோகணியானவள் வந்தனைபுரிந்து சிந்தையுண்மகிழ்ந்து, உபசாரத்துடனிற்க, சோமனும் உரோகணி யைக் கண்ணுற்று, ஓ நாம் வனத்திற்கண்ட நாயகியைப்போலிருக் கின்றனென, சௌந்தரியங்களைப்பார்த்து சோபமோகத்திலாழ்ந்து ஏ பெண்மணியா யிலங்கிய கண்மணியே யாம் விவாகத்தி லுனை யிப்படிக் கிருக்கின்ற சுந்தரத்தை யறியேன் இப்படிக்கான விஷய முணர்த்தென்றான். ஆஹா பிராணநாதா! கேட்பாயென ஆதியோ டந்தமான விர்த்தாந்தங்களையுணர்த்தகேட்டு உள்ளங்களித்து தா ன் கண்டபின், தனக்குற்ற விர்த்தாந்தங்களையும உரோகணிககு வி னவி, மகா நேச விசுவாச போக இஷ்டகாமியங்களையெல்லாம் மற் றைய ஸ்திரீகளையெல்லா மறந்து உரோகணி வசமாகவே எப்போ து மனுபவித்துவந்தான். சந்திரன் இபபடிக் கிருக்குங்காலையில் பிரமலோகத்தில் வசிக்கும்படியான மகா விஞ்ஞானாச வல்லவரா கிய நாரதமகாமுனியானவர் சுவர்க்க, மத்திய, பாதாள, திரிலோ கங்களிலும் சஞ்சரிப்பவராகையால், சந்திரமண்டலம் வந்து தட் சப்பிரமா புத்திரிகளாகிய சசிபத்தினிகளைக் கண்டு, க்ஷேமபூர்வங்க ளோர்ந்து போவோமென்றவராய், சசிமனைபுக்கினர். தட்சப்பிரமா சுதைகளனைவருங்கண்டு சரணமடையவே முனிவனும் கல்யாணம் மங்களாணிபவே ங்தென் றாசிகூறி, ஓ விண்ணொளியாகிய கண்ம ணிகளா உரோகணியன்றி, மற்றையர்கள் யாவரும் முகமழுங்கி, விழிகலங்கி, மனம் புழுங்கித் தேயஸ்குன்றி நிற்க, இயாது காரண மெனக்கேட்க, ஓ வேதமேயோர்ந்த மாதவமுனியே யெங்கள் நாத னுமாகிய, சீதளமதியும், ரோகணிவசமாய்ப், போகமேலாகி, யெங்க ள் இயாவரையுமறந்தான் அதுதான்குறையென்று இவ்விஷயத்தை யெனது பிதாவுக்குரைட் பீரென்று அஞ்சலிசெய்தனர். ஆஹாவென் றாசிர்வதித்து, கேட்காம லோதியவென்மொழில், நேரிற் பார்த்து மே கூறுதிருப்பது பெண்களாவெனச் சென்று, உடனே தட்சப் பிரமா சமுகத்திற் சென்று, திரிலோக வர்த்தமானங்களுடன் தன் புத்திரிகளுண்டாய குறைகளை மிகவும் விரைவாகக்கூறினர். இதைக் கேட்ட தட்சப்பிரமா உடனே சினக்குறிப்புற்று நெடுமூச்செறிந்

து இருவிழி சிவந்து, ஓர் தூதனை சந்திரமண்டலமனுப்பி தக்ஷனை ம் சந்திரனைக் கொண்டுவாவென்ற அளவில் ஒற்றனுமோடிப் பொட்டெனக் கூவி, சட்டமாத்தட்சன்முன் விட்டுமே நின்றான் அப்படியே கண்டவுடனே சந்திரனானவன் தட்சப்பிரமாவை வணங்கி நின்றான். நின்ற சந்திரனை நோக்கி, ஏ சந்திரா! யெனது புத்திரிகள் வுன்னைப்புகழ, யானுமேமகிழ, மணமுடித்திருக்க, நீயும் பட்சபாதமான, விஷயத்தை நடத்தி, மற்ற ஸ்திரீகள் யெல்லோரையும் வியாகூலம் பிடிக்கச்செய்தாய் ஆனால் நீயும் க்ஷயத்தால் பிடிக்கக்கடவதென்று கொடிய சாபமளித்தார். அச் சாபத்தைப் பெற்று, நாளுக்குநாட் க்ஷீணகதியடைந்து மனமானது நொந்து யிதற்கென்செய்வோமென்று தன்னுடைய குலகுருவாய் விளங்கும்படியான பிரகஸ்பதி பகவானிடத்திற் சென்று அநேக வந்தனஞ்செய்து நிற்கின்ற கலாநிதியை பிரகஸ்பதி பகவானோக்கி, ஆஹா சந்திரனே கேட்பாயாக இந்த கன்மபூமியின்கண் சமிவன க்ஷேத்திரமொன்றுண்டு அந்த மகா க்ஷேத்திரத்தின்கண் வசிட்டமகாரிஷியானவர் நிமிச்சக்கரவர்த்தியின் சாபத்தால் விதேகமாகி, பிரமனிடம்போய் அத்தல விசேடமறிந்து பூசித்து தனது சுயதேகம் பெற்றார். ஆகையால், அந்த க்ஷேத்திரத்தின்கண்போய் நீயும் பூசிப்பாயாகில் க்ஷயநிவர்த்தியாகுமென் றுணர்த்தக்கேட்டு, தன் குலகுருவை அநேக ஸ்தோத்திரங்களுடன் சரணமடைந்து விடைபெற்றுக்கொண்டு இப் பூவின்கண் விளங்கிய சமிவனக்ஷேத்திரம் வந்து அநேக ரிஷி தபோதனர்களையுங் கண்டு தரிசித்து, வசிட்டராலச் செய்திருக்கின்ற கூப தீர்த்தத்தின் அருகில் ஓர் தீர்த்தமுண்டுபண்ணி ஸ்நானாதி முதலிய சர்வ அனுஷ்டான செபதபங்களையு முடித்து கோவிலுட்சென்று விநாயகனையும் பூசித்து வசிட்டேசரனை விளங்கிய கருவேனாதன் சந்நிதியிற் புக்கி கீழே படிந்து, தூவாதசாங்க, அஷ்டாங்க, சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தெழுந்து நின்று ஏ சம்போ, மாதேவா, கௌரிமனோகரா, கங்காதராவென்றானந்த கீர்த்தனமாடியும், பல ஸ்தோத்திரம் பாடியும், கண்களிலிருந்து ஆனந்தபாஷ்பமுதிர அரஹரசம்போ ஆதியந்தமில்லாத அத்தனே, கயிலையங்கர்த்தனே, அம்பலநிர்த்தனே, மனம் வாக்குக்கெட்டாதமுத்தனே, பரிசுத்தனே, உடல்பொருளாவிமூன்றும் உனக்கு ஒப்புவித்தேன் அடியார்க்கருளிய அமலனேயென்று

# ஸ்தோத்திரம்.

## ஆசிரியப்பா.

கரியுரிபோர்த்திய காலகாலா
அரியுரிதரித்த வரவாபரணு
சுடலையிலாடிய சோதியேசுடரோ
னடலைதீர்த்தாண்ட நாதவேதாந்தா
அம்பிகைபாகா அழல்கரமேந்தி
சம்புவேதின தயாளுவேசீதா
முப்புரமெரித்திடு முதல்வனேபோதா
அப்புடன்தும்பை யணிந்தவேணியனே
பூமனோர்சிரசைப் போக்கியபுனிதா
காமனையங்கிக் கண்ணினூற்றழித்தோய்
என்பாராப்பூண்ட விறைவனேயேகா
அன்புடனின்னை யானந்தமாக
எப்புலவோருனை யேத்தியேஸ்தோத்திரஞ்
செப்புவர்கொடிய தீங்ககற்றுவையே.

ஏ பரமாத்மாவே! ஏழைபங்காளா சம்போதயாநிதேஎன்று பலவாறாக ஸ்தோத்திரஞ்செய்து இரண்டு கரங்களையுஞ் சிரசின் மேற் கூப்பிநின்று சகஸ்திர நாமாவியற்றியு நிற்கின்றதருணத்தில் சாட்சாத் பற்பூரகாளேசர் மகிழ்ந்து ரிஷபவாகனரூடராய் கலாநிதியின் னேரிற்பிரகாசித்து ஏ சந்திரா! வுனது ஸ்தோத்திரங் களுக்கு மிகவும் அன்புகந்தோம். நீ எம்மை நோக்கிவந்து பூசித்தபடியால் உனக்குவேண்டிய வரத்தைக்கேட்பாயென்று ஈஸ்வரனுனவர் வினவியவுடனே கலாநிதியானவன் தன்னை மறந்து ஆனந்தபாஷ்பம் இருவிழியருவி புரள ஆஹா சுவாமின் இவ்வேழையாகிய தமியேன் நினது திவ்யதிருவடிகளை நேரிற் பிரத்யக்ஷத்திற்கண்டபோது வேண்டுவ மொன்றிலே. இப்போது இத்தலத்தில் ஸ்ரீவசிட்டரால் செய்யப்பட்ட தீர்த்தத்தின் அருகில் அடியேன் ஒரு தீர்த்தமுண்டுபண்ணி அனுஷ்டானங்களையுமுடித்து

நின்னடிவணங்கி கருணையைப்பெற்றதால் அத்தீர்த்தத்தால் வரும் சுகிர்தங்களை யெக்கொடிய தீமை நோயாளரடைந்தாலும் அத்தீர்த்தமே யகற்றும்படியான வரமளித்தும் யெனது கலைகளாகிய ரூபத்தையும் ஸ்வாமின் கங்கைதாங்கிய சடாசூட்சத்தில் அணிய வேண்டுமென்று பிரார்த்தித்து நின்றனன். அப்படியே திரியம்பகனாகிய ஈஸ்வரன் உண்மகிழ்வடைந்து சசியினது கலையைகொன்றைசூடிய சடிலத்தில் புனைந்து பிறைமுடிப்பெம்மானாயிலங்கி ஏ சந்திரா! நினதுமாமனை தட்சப்பிரமாகொடுத்த கொடிய க்ஷயமானது இன்றுமுதல் கிஷ்ணபக்ஷத்தில க்ஷீணமும் சுக்கில பக்ஷத்தில் விர்த்தியாயுமிருந்து நின் பத்தினிகள் யாவரிடத்திலும் ஏகப்பிரதியோடிலங்கி இஷ்டலாப சுகத்தை யனுபவித்துக்கொண்டு எதாப்பிரகாரம் நின்னுடைய மண்டலத்தில் பிரகாசித்து யிருப்பாயென்றுஆக்ஞாபித்தருளியும் சோதிலிங்கத்தில் அயிக்கியமாகினரென்று சூதபுராணிகர் இச்சரித்திரத்தை சௌனகாதிகளுக்கு உணர்த்தியும் பின்னர் இதுபோலவே சூரியனுக்கும் ஒரு சாபநேரிட்டது. அவனும் இத்தலத்தில் வந்து சமிவனேசரால் நிவாரணமடைந்தானென்றோதினர்.

சந்திரசாபம் விமோசனச் சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## பன்னிரெண்டாவது

# சூரியசாபவிமோசனச்சருக்கம்.

அருசீரடியாசிரிய விருத்தம்.

திரிகால முணர்சூத முனிவர் பதாம் புயமதனிற்
செழித்த பூங்கா
விரிசூத வலர்தூற்றி கரகமலஞ் சிரசேற்றி
விநயமுன்று
பரிபாக முறுஞ்செளன காதிபுங்கவரர்தொழுது
பரிதிசாபம்
அரிதானசமிவனப் பெம்மானீத்த
வருங்காதை யருண்மினென்றார்.

ஓ நைமிசாரண்யவாசிகளாகிய தபோநிதி சிரேஷ்டர்களே! இரவியினுடைய விர்த்தாந்தங்களைக் கேட்பீராக. பூர்வம் சிருஷ்டிநிதியான மயனென்பவருக்கு இரண்டு புத்திரிகள் உஷையென்றும் சாயையென்று நாமகரணமுடைய மஹா திவ்ய தேஜசோடும் பிரகாசிக்கின்ற கன்னிகைகளை துவாதசகலைகளோடும் விளங்குகின்ற கதிரோனுக்கு விவாகஞ்செய்துகொடுத்தார். அப்பெண்களில் உஷையென்பவளோ பர்த்தாவின்மீது அதிகப் பிரீதியுடையவளும் உபசாரங்களில் சிறந்தவளுமாகயிருப்பாள். சாயையானவள் நாயகனிடத்தில் லீலாவிநோதங்களிற் சிறந்தவளாக இருப்பதில் ஆதித்தனானவன் உபசாரஞயகியான உஷையின்மீது பக்ஷமில்லாதவனாகி லீலைகளிற்பிரீதியாகி, சாயாதேவியினிடம் அதிக அன்புடையவனாகவும் உஷையினிடம் எப்போதும் வெறுப்பாகினதால் உஷை மிகுந்த துக்கத்துடன் தேகபூஷணாதிக ளணியாமலும் போசனாதிகளில் விருப்பில்லாமலும் நாளுக்குநாள் தேகமெலிவடைந்து மிகுந்த கிலேசத்துடன் தனது பிதாவாகிய சிருஷ்டிமயனிடஞ்சென்று தனக்கு இரவியாலுண்டாகிய விபரீத விர்த்தாந்தங்களையுங் கூறிநின்றாள். இதைக்கேட்ட மயனானவர் மகளைநோக்கி ஆஹா இப்படிக்குமிந்தக்காசிபபுத்திரனாகிய அரவிந்தநண்பன் செய்வனோவென்று மகள்வாடிய திருமேனியைக்கண்டு, இரவிமேற் சினங்கொண்டு, ஆதவனைக்கொண்டுவாவென்று, தூதனையனுப்பினின்றார். அப்படியே தூதுவனோடிப், பானுவைநாடி, துதித்து நின்றுடி, ஏ பகலவனாகியபதியே மயனார் நக்ஷணமழைக்தாரென்று கூறியவுடன் துவாதசரூபத்தோடும் மயனிடமணுகி வந்தனை புரிந்து சிந்தனையோடு நின்றான். அப்படிநிற்குமிரவியைநோக்கி ஓ ஆதவனே யெனது கனிஷ்டபுத்திரியாகிய உஷாதேவியினிடம் உனக்கு ஆகிய நிகிர்ஷ்டமியாதுகாரணம் சீக்கிரம் வினவென்று அதிக கோபத்தோடு படபடவென்று கடுத்துநத்துக்கேட்குமளவில் சூரியனுந் திகிலடைந்து தேகமயிற்குச்சலிட்டு பதிலொன்றும் சொல்வதற்கிடமிலாமல் நிற்கக்கண்டு, அடடா சாபம்பிடியடா, அதுவுனைவிடாதடாவென்றும் அருணன் சாரத்தியத்தினால் நாம் உலகிற் பிரகாசித்து உலகசர்வகிரியாதிகளும் நம்மால்த்தான் ஆவதுவென்று கர்வமடைந்தாயோ நீயுதிக்குந்தோறும் மந்தேகராளாகிய இராக்ஷதர்கள் பிடிக்கிறதுந்தவிர அரவின் பகையுமுண்

டல்லவா, ஆகையால் உனக்கு யின்றுமுதல் ஒளிமழுங்கிக் கூன டையக்கடவதென்று கடூரசாபத்தைக்கொடுத்தார். தினகரனும் ஒளிமயங்கி, விழிகலங்கி, முகமுறங்கி, நிமிராத சுருண்டகூனுடன் தனது மண்டலமடைந்து வாடினான். இச்சாடம் எவ்விதமாக நிவாரணமாமோவென்று நாடினான். மகான்களாலறிவோமென்று மெங்கேயுந் தேடினான். அத்தருணத்தில் திரிலோகவர்த்தமானங் களறியும்படியாய்ச் சஞ்சரிக்கின்ற யாழ்வல்லவராகிய நாரதமகா முனியைக்கண்டு அநேகவிதமான ஸ்தோத்திரங்களுடன் நமஸ் கரித்து ஹே மகாமுனியே தமியேனுக்கு மயனென்பவராற் கொடி தாகிய சாபநேரிட்டவிஷயத்தை ஆதியோடந்தம்வரையில் வினவி மிகவும் மனங்கலங்கிநிற்கும் பாஸ்கரனை நாரதமுனியானவர் கிரு பையோடு நோக்கி ஓ தினகரா! யிப்படிக்கு இதன்முன் காலாதிதி யாகிய சந்திரனுக்கு இப்படிப்பட்ட ஓர் சாபம் தக்ஷபிரமாவினு லுண்டாகி அச்சாபத்தைக் கர்மபூமியின்கண் சமிவனக்ஷேத்திர மடைந்து யாதொரு சாட்சாத் சகத்க்காரணனாகிய உமாபதியைப் பூஜித்து ஸ்தோத்திரஞ்செய்து தக்ஷணம் பிரத்யக்ஷமாய் ரிஷப வாகனருடராய் பார்வதிசமேதராய்த்தோன்றி வரங்களுமளித்து சாப த்தையுமாற்றினார். ஆனதால் அப்படிப்பட்ட சமிவனக்ஷேத் திரம் நீயும அதிசீக்கிரமடைந்து இயாதொரு கௌரிமனோகரனா கிய கங்காளமூர்த்தியைத் தரிசித்தால் உன்னுடைய கொடிய கூனாகிய சாபம் நிவாரணமாகுமென்று யாழ்வல்லவரான நாரத மகாமுனிவர் கூறிச்சென்றபின்னர் தினகரனவன் இப்பூமியின்கண் சாட்சாத் சிவபிரானமர்ந்த சமிவனக்ஷேத்திரத்தில் அணுகி ஸ்ரீ வசிட்டமுனிவராலுற்பத்திசெய்த தீர்த்தத்தின் சமீபத்தில் ஓர் திவ்யதீர்த்தமுண்டுபண்ணி ஸ்நானனுஷ்டான சங்கற்பங்கள் யாவு முடித்து கருவேலின் கண்ணமர்ந்த கருணாமூர்த்தி யிலங்கும்படி யான கோயிலுட்புகுந்து கனைசமூர்த்தியை ஸ்தோத்திரவந்தனை புரி ந்து ஈஸ்வரனது திருச்சந்நிதானமடைந்து புயாசலமழுந்தப் பூமி யிற் படிந்து அஷ்டாங்க சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து பரவச புளகாங்கிதனாகி யெழுந்து நின்று இரண்டு கரங்களையும் சென்னி யின்மேற்குவித்து ஆனந்தபாஷ்பங்கள் இருவிழிசொரிய மயிர்க் குச்செறிட்டு மெய்மறந்து இரண்டு முகூர்த்தம்வரையில் பரம நிட்டைகூடி விழித்துநின்று, ஏ சம்போ, மாதேவா, கங்காதரா,

பார்வதிசமேதா, காளகண்டா, கயிலையாளி, கருணாநிதி, திரிபுராந்தகா, ஆத்மநாதா, கங்கைசூடிய கபாலபிக்ஷாண்ட கண்ணுதலேயென்று பலவாறிறைஞ்சிநிற்கின்ற தினகரனதுமுன்னம் வெள்ளியங்கிரிபோற் பிரகாசிக்கின்ற இடபவாகனரூடராய், மலைமகள்பாகமாவிளங்கிய சிவபெருமான் இரவியை நோக்கி ஏ பாஸ்கரா! நீயோ மிகவும் மெய்மைப் பக்திவிநயத்துடன் பூசித்தபடியால், நின்னுடைய தவமகிமையறிந்து சந்தோஷமடைந்தோம். வேண்டிய வரம் யாது வினவெனக்கூறின. இனியவசனாமிர்தத்தை கதிரோன் கேட்டு ஆனந்தபாஷ்பம் தாரைதாரையாயொழுகத் தன்னை மறந்தவனாகி புலாதிகாணங்களும் ஒடுங்கி, செவிமடுத்து ஹே இந்து சாபவிமோசனா தமியேன் இச்சமிவனக்ஷேத்திரத்தை கண்ணுற்றபோதே அடிமையினது கொடியசாபம் விடுபட்டவனானேன் மெனது கலைகளையுந் தமது வீட்சண்யத்தில் அங்கீகாரம் செய்வதுந்தவிர, அடிமையாலுண்டாக்கிய தீர்த்தத்தில் எப்பேர்ப்பட்ட கொடிய பாபிஷ்டாள்வந்தாடினாலும் சர்வாபேஷ்டமும சித்தியாக வேண்டிய வரமும் கிருபை பாலிக்கவேணுமென்ற தினகரனை நோக்கி ஏ பாஸ்கரா! அப்படியே நினதிஷ்டப்பிரகாரம் அருளினோம். ஆகையால் நீயும் சதா நமது பூசையை விதியின்படி அனுஷ்டித்துவருவாயென் றுக்ஞாபித்து சோதிலிங்கத்தினிடம் அயிக்கியமாகினர். உடனே அரவிந்தநண்பனாகிய பானுவும், தனது லோகமடைந்து சேஷ்டகனிஷ்டபாரியாருடன் மிகவும் அன்பொடிசைந்தவனாக நின்பொருட்டால் இயாதொரு சாட்சாத் சிவபிரான் அருள்பெற்றேனென்று உஷையாகிய மனைவியை மிகவும் புகழ்ந்து சாயாதேவியையும், கொண்டாடி இருபாரிகளையும் இரண்டு நேத்திரஸ்தானம்போலா யெண்ணி ஆனந்தபரவசபோகங்களையும் அனுபவித்தும் சமிவனக்ஷேத்திரத்தில் ஈசுவரனுத்தரவின்படி எப்போதும் பூசித்துவருகின்றானென்றும் இன்னுமிதுபோல் பூவுலகின்கண் சந்திரவம்சத்திலுற்பவமான நவசோழர்களில் கலிகாலச் சோழனுடைய கருங்குட்டமும், அத்தலத்தில் வந்து நிவாரணமடைந்தானென்று சௌனகாதிமகாரிஷிகளுக்குச் சூதபுராணிகர் சொல்லுவதானார்.

சூரியசாபநிவாரணச்சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

பதின்மூன்றாவது

# கலிகாலச்சோழன்மோகம்.

நிவாரணச்சருக்கம்.

விருத்தம்.

தாரணிதனிலிச் சமிவனத்தெய்யமாள்
தகைமைசேர் திருவிளையாட்டின்
ஆரணமறிந்த சூதனைச் சௌன
காதிகள் பணிந்துநின்றலரி
காரணச்சாபம தீர்ந்தது நன்கு
கழறியதுணர்ந்தகங் களித்தோர்ம்
பூரணமதியின் மறபுசெம்பியன்றன்
புதுமைகூறென ரிஷிபுகல்வார்.

இப்படிக் கிறைஞ்சிக் கேட்கும்படியான நைமிசாரண்யவாசிகளாகிய சௌனகாதி மகாரிஷிகளை நோக்கி, திரிகாலவர்த்தமானமுணர்ந்த ஸ்ரீ வியாசபகவான் மாணாக்கராகிய சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினர். ஓ நைமிசவாசிகளே! கேட்பீராக. சென்ற வராக கற்பம் கலியுக காலத்தில் கலாநிதியாகிய சந்திரவம்சத்தி லுற்பவித்த நவசோழ அரசர்களோ சகஸ்திரபாதன், காந்தாரன், விக்கிரமன், மகேந்திரன், விசேந்திரன், கிர்மிகண்டன், சௌந்தரியன், பிர்கதவீரியன், கலிகாலன் இப்படி ஒன்பது சோழஇராஜர்களும், இத் தஞ்சையாநகரை முன்னாளாளப்பட்ட மனுவரசர்களுக்குப் பின்னர் மேற் கூறிய சோழபூபதிகளும், ஒவ்வொருவர்களும் சிலநா ளாண்டுவருவர்களாம். இத் திராவிடதேசத்திற்குள் சோமபுரமென்றொரு பட்டினமுண்டு. அந் நகரத்தை மேற்சொல்லிய சோழபூபதிகளில், கலிகாலச்சோழன் அச்சோமபுரத்தை இராச்சியபரிபாலினம் செய்துவருநாளில், அந்நகரில் பிர

ம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரமென்றும் அவரவர் வருணாச்சி ரமங்களுக்குத் தவறுதலில்லாமலும், ஈஸ்வர பக்தியிற் சிறந்த வர்களாகவும், யெம்மாதமும் மும்மாரி பொழியவும், தனதானிய சந்தான விர்த்திகள் பெருகவும், நல்லறமென்பதைக் கைவிடாம லும், புல்லரைக் காண்ப தரிதாகவும், அரசன் ஆறிலோர் கடமை கொள்ளவும், இரதகச துரகபதாதிகளுடன் சைவாகமத்திற் சிற ந்த சிந்தையுடையவனா மன்னுயிருந் தன்னுயிராகப் பாவித்து, தர் மமே நிட்செயமென சமஸ்த ஐஸ்வரியங்களையுமடைந்து, மந்திரி, புரோகிதர்கள், வித்துவான்கள் சதா புடைசூழ, வீரத்தில்விசய னைப்போலும், ரூபலாவண்யத்தில் பூரணசசியைப்போலும், சே னைசைன்ய வீரர்களும் போற்ற, சந்திரவட்டக் குடை நிழற்ற அரசுபுரிந்தருளுங் கலிகாலச் சோழமகாராஜனுக்குப் பூர்வ ஜன்மா ந்தர கன்மத்தால், தனக்குத் தேகத்திலோர் நோயான கருங்கு ஷ்டத்தினாற் பீடித்து, புத்திரோற்பத்தியுமின்றி, மனங்கலங்கி, யெப்போதுந் துக்கத்திலாழ்ந்து, பக்கத்திலுள்ளவர்களையும் நோ க்க, மனம் வெட்கமுற்றவனா சதா ஈஸ்வர ஸ்தோத்திரம் மறவாத சிந்தையோடு செங்கோன் முறைமையில் இயாதொரு வழுவிலாது நடாத்திவருநாளில், ஓர் நாள் சகல மந்திரி, பிரதானி, தந்திரக் யான பண்டிதர்கள் புடைசூழ, தனது சபாமண்டப மடைந்து த னக்குண்டாகிய கொடிய உரோகத்தைப்பற்றி ஆலோசனைபண்ணி, மணிமந்திர ஒளஷதாதிகளினால், சிக்கைசெய்வோமென உத்தே சித்து அநேகவிதமாகிய ஒளஷதங்களையும், மந்திர யெக்ஞாதி சா ந்திகள் கர்மகாண்டப்பிரகாரம் செய்துவந்ததில் ரோகமானது நா ளுக்குநாள் அதிவிர்த்தியாய் மெய்முழுதும் வியாபித்தது கண்டு, மிகவும் துக்கத்திலாழ்ந்தவனாக, கலிகாலச்சோழனென்ற நாம தேயமிருக்க கரிக்கால்ச்சோழனென்ற நாமதேய முண்டாகினது. இராஜனும் இதற்கென்செய்வோம் பூர்வ வினை யினாலுண்டானதோ, நாம் அனுபவிக்கவேண்டிய காலம் வரையில யெவ்வித மணிமந்திர ஒளஷதத்தினாலும் நிவர்த்திக்கக் கூடியதல் லவோவென்று இயாதொரு ஒளஷதாதிகளையும் உபயோகிக்காமல் அதிக விசாரமுற்றிருக்கின்ற காலையில் ஸ்ரீமத் துர்வாசமகாமுனி

யானவர் பிரமலோகத்திலிருந்தும் சர்வ புவனங்களெலாம் சஞ்சரித்துங்கொண்டு, தண்டுகமண்டல காயாச விபூதி உருத்திராக்ஷ மாலிகாபரணமிலங்க, யெமனி, யெயாசனப், பிராணயாம, பிரத்யாகார, தியானதாரண சமாதியென்கின்ற அஷ்டாங்க யோகங்களைக் கரைகண்டவராயும், தம சமாதி இந்திரிய நிக்கிரகங்களுடன் கூடினவராயும், மகா உருத்திராம்சை அடைந்தவராயும், விளங்குகின்ற துர்வாசமகாரிஷியானவர் அநேக தலதீர்த்த யாத்திரைகளெல்லாம் செய்துகொண்டு, இத் தஞ்சைமாநகரச் சமிவனக்ஷேத்திரம் வந்து, ஸ்ரீ வசிட்டமகாமுனியையும், அவர் பத்தினியாகிய அருந்ததியையும் மூர்த்தி தலம் தீர்த்தங்களின் மகிமையையும் பார்த்து மகா விசேஷமாய் விளங்கும்படியான சந்நிதானமடைந்து, ஆனந்தபரவச புளகாங்கிதங்கொண்டு உள்ளங்கனிந்து, சாட்சாத் வசிட்டேசனையும், அம்மை பிரகநாயகியையும் மோன நிட்டையினின்று, வணங்கி சித்தபரிபாக மெய்தி ஆனந்த பாஷ்ப மிருவிழி யருவிகளோடனின்று, அநேகவித ஸ்தோத்திரங்களினால் ஸ்ரீ சிவபிரானது உள்ளங்குளிரக் கொண்டாடி ஆனந்தக்கூத்தாடி, தண்டாகாரமாய்க் கீழே வீழ்ந்தெழுந்து, கருணாமூர்த்தியின் கிருபையுறப் பணிந்து, தக்ஷணாமூர்த்தியின் பக்கத்திலிருக்கும் ஸ்ரீ வசிட்டமகாரிஷியையும், கற்பினிலரிய பொற்புடையாளான தர்மிஷ்டையையுங் கண்டு, ஆஹா நீங்கள் பெற்ற பேறே பெரும்பேறெனக் கொண்டாடி, ஆனந்தபரவசமாய் வாழ்த்தினின்று சமிவனக்ஷேத்திர மகிமையைக் கண்ணுற்று, உள்ளத்தடங்காத பேரன்பானது மேலிட்டு, வெளியிற் புறப்பட்டு, பின்னுந் தேயசஞ்சாரஞ்செய்வோமெனக் கருதி, உத்தரபாகமாய்ச் சென்று, வீரட்டேச்சுரமெனுங் கண்டியூரடைந்து வீரட்டேச்சுரனை வணங்கி, அப்பாற் பஞ்சநத க்ஷேத்திரமடைந்து பஞ்சாபிகேசனையும் தரிசித்து, இன்னுமநேக சிவ க்ஷேத்திரங்களெலாங் கண்டு தரிசித்து, கலிகாலச் சோழமகாராஜன் ஆளப்பட்ட சோமபுரமெனும் நகரத்தை நோக்கி அந் நகரத்தின் சிறப்பையும் தேவாலயம், பிரமாலயம் அநேகவிதமான தர்மசத்திரம், நந்தவனம், தடாகங்கள், விஸ்தீரணமான வீதியின் நாகரீகங்கள், மாடமாளிகை கூடகோபுர உப்பரிகை

கள், இரதகஜ துரகபதாதிகளின் குழாங்கள் இன்னும் அநேகவிதமான வைபவங்களை யெலாங் கண்ணுற்றவராய் ஆஹா யிப்பேர்ப்பட்ட இராச்சியபரிபாலினம் பண்ணும் அரசனைப்பார்த்துச் செல்வோமென்ற வெண்ண முட்கொண்டவராய் ஸ்ரீ துர்வாசமகாமுனிவரானவர் வேந்தன் சபாமண்டபமணுகினார். அப்போது பூபாலனாகிய சோழமகாராஜனும் சர்வ மந்திரி, பிரதானி, மண்டலீகரர், பதாதிகள், புடைசூழ கொலுமண்டபத்தில் செங்கோல் நடாத்தி, தேச விசாரணை செய்திருக்கின்ற சமயத்தில் ஸ்ரீ துர்வாச மகாரிஷியானவர் தனது கொலுமண்டபம் நோக்கி வருவது கண்டு, சந்திரகுலதிலகனாகிய சோழபூபதியும் யெழுந்து சகல உபசாரத்துடன் யெதிர்கொண்டழைத்து வந்து பத்ம பாதங்களில் பரிமள மலரைக்கொண்டருச்சித்து, நமஸ்கரித்து அர்க்கிய பாத்தியாதிகளு முதவிப் பொற்பீடமளித்து, அதில் யெழுந்தருளுவித்து மிகுந்த பயபக்தி விசுவாசத்துடனே கைகூப்பி, வாய் பொத்திநின்று ஹே சுவாமின்! அடியேன் பிறவிகள்தோறும் செய்திருந்த பூஜாபலத்தினால், தமியேன் ஜன்மசாபல்ய கிர்தார்த்தனாகும்பொருட்டாய் ஈங்கெழுந்தருளியது யெனது புண்யமே புண்யமென்று, பரவச புளகாங்கிதனாகி நின்று, அடிமையா லிங்கு நடக்கவேண்டிய கைங்கிரியாதிகளுக்கு உத்திரவருளவேணுமென்று மிகுந்தபக்திவிநயத்துடன் நிற்கின்ற பூபதியை முனிவர்நோக்கி ஓ வேந்தனே! யுனது நகரத்தின் சிறப்பிற்கும் நீ நடாத்தும் வழுவிலாசெங்கோன்முறைமைக்கும் உனது இராச்சியத்தில் சர்வ பிரஜைகளுடைய சல்லாபத்திற்கும், இந்நகரத்தில் சகல தர்மங்கள் குறைவற நடாத்துமுனது புண்யசீலத்திற்கும், உனதுமுகமன் அன்புகூர்ந்த அதிபக்தி விசுவாசத்திற்கும் யாம் மிகவும் சந்தோஷமடைந்தோமென்று இராஜன்மீது மிகுந்த ஆனந்தமுடையவராகச் சம்பாஷித்திருக்க அதிசீக்கிரத்தில் முனிவர்க்கு விருந்தனமாகிய, பற்பல சித்திரான்னமும் சட்டரசவர்க்கங்களும் முனிவர்க்கிச்சா பதார்த்தங்களு கணப்போதிலமைத்து சர்வசோடசோபசாரங்களுடன் போசனாதிகளைசெய்துவைத்து கந்தபுஷ்ப தாம்பூலாதிகளுமீய்ந்து பிரிய வசனங்களினாற் சகலபதாதிகள்சூழ முனிவருடன் இராஜன் வசனித்துக்கொண்டிருக்குந்தருணத்தில் மகாமுனிவராகிய துர்வாசரிஷியும் அரசன்மீது பெருங்கருணையுண்டாகிப் பூபதியை நோக்கி

ஏ சசிகுலதிலகா! எம்மாலுமக்காக வேண்டியவரமியாதென்று வினவியவுடனே பூபனும் ஆனந்தக்கண்ணீர் ததும்பி, சுவாமின் அடிமையினுடைய தேகத்தில், சொற்பகாலமாக இயாதோ பூர்வ ஜன்மாந்தரகன்மத்தால் கரிய, மேகரோகமென்றுண்டாகி அதனாற் பிடிக்கப்பட்டுள்ளவனு வருந்தி யநேகவிதமான மணிமந்திர ஔஷதாதிகளினாலும், நிவர்த்தியில்லாத வியாகூலமொன்றிருப்பதேவிர வேறுவிதமாக வேண்டும்வரமியாது கூறுவேனென்ற வசனத்தை முனிவனுணர்ந்து சாட்சாத் பரமசிவனை நோக்கி, ஒரு முகூர்த்தம் வரையில் நிட்டை கூடியிருந்து விழித்து பூபதியை நோக்கி ஏ பொன்னித்துறைவனே கேட்பாயாக, உனது பூர்வகன்மரோகமானாலும், அதானது நிவாரணமாகும்படியான உபாயமொனறிருப்பது இயாதெனில், இப்பூவின்கண் நிருதிபாகத்தில் மூன்றுயோசனைதூரத்தில், பஞ்சநதக்ஷேத்திரத்திற்கு தெக்ஷணபாகத்தில் எட்டுக்குரோசத்துக்குள்ளாக, தஞ்சைமாநகரமென்றொரு நகரத்தின், உத்தரபாகத்தில் இரண்டு குரோசத்துள் ஓர் பெரிய சமிவனக்ஷேத்திரமொன்றிருப்பது அத்தலத்தில், ஸ்ரீ வசிட்டரிஷிமுதலாகிய, சந்திராதித்தாளுக்குண்டாகிய கொடிய சாபங்களும் அக்ஷேத்திரமூர்த்தி தீர்த்தமகிமையால் விமோசனமாகியிருக்கின்ற தலத்தில் நீயும்சென்று ஸ்ரீ கயிலையாளியாகிய கருவேனுதனைப் பூசிப்பாயாகில், இன்னேய் இரவிகண்டபனிபோலாகுமென்று ஆசிகூறி முனிவரும் தனது ஆச்சிரமத்துக்கேகினர். இவைகளை யுணர்ந்த பூபதியான கரிக்காற் சோழமகாராஜனும், ஓகோ அப்பேர்ப்பட்ட சமிவனக்ஷேத்திரம்போய் சிவபிரானருள் வீக்ஷண்யத்தால் இக்கர்மநோயகற்றிக்கொள்வோமென்ற ஒருறுதியால், சொற்பனு அவஸ்தையிலும் இதுவே வியாபகமாய்க்கண்டவனுக நாம் யெப்படி யந்தக்ஷேத்திரமறிந்து போவோமென்ற கவலையோடிருக்குங்காலத்தில் இயாதொரு சமிவனேசரது திருவுளத்தி லிவ்வரசனுடைய உண்மைக்கருத்தறிந்து ஹாஹா ய தா நமதாலயம வரவேணுமென்று நமது நாமமே ஜீவனமாக அன்புபூண்டிருக்கின்ற அரசனது வருந்துதற்கிரங்கிய புராரியும் திருவுளத்தேவலினுல் தடுத்தாட்கொள்ள நினைத்தமாத்திரத்தில் அச்சோழேந்திரனுளும்படியான சோமபுரத்தில் இச்சமிவனத்திலுள்ள மிருகாதிகள் யாவும் சென்று, கிராமாதிகளிலுள்ள சகல பயிர்கள், கதிர்கள், கந்த

மூலங்கள், விருக்ஷாதிகள் சகல பலன்களையும் அழித்து சின்னபி னப்படச்செய்வதைக் குடியானவர்களறிந்து, அரசனிடம்போய் முறையிட வேந்தனுங்கேட்டு, ஆஹா இதுகாள்பரியந்தம் இந்தகரி ன் பிரஜைகளுக்கு இயாதொரு இம்சையில்லாமலிருக்க, இப்போ து மிருகவுபாதை நேரிட்டது இயாது காரணமோ வென்று இரா ஜன் மனம் வெகுண்டு மந்திரிமுதலிய சதுரங்க சேனை சைன்யங்க ளுடன் பாலா, யீட்டி, வல்லயம், தோமரம், முத்காமுசண்டி, பி ரங்கி, துப்பாக்கி, வாள், சூலம், வேல், அம்பு, யெம்வலை, க யிறுவலை, வேட்டைநாய், வேடர்கள் முதலிய சகல சன்னுகத் துடன் இராஜனும் அதிக வேகமுள்ள புரவியிலேறி ஜெயபேரி மு ழங்க, சர்வ பரிவாரங்களுடன் வனத்தில் வேட்டையாட ஆரம்பி த்து, கானகம்புக்கி மகா சுத்தவீராகிய வேடர்களினால் வனத்தில் ல் வலைகளைக்கட்டி, பறையடித்துக் காடுகலைத்து, ஆங்காங்கு வே டர்கள் சகல ஆயுதங்களுடன் சென்று மிருகங்களை நோக்கி, அல் லோலமாகத் திறத்துப் பிரங்கி வெடிகளைத் தீர்த்து அவரவர்களு நிற்கும் தருணத்தில், சிங்கம், சிறுத்தை, வரிப்புலி, கழுதைப்பு லி, குண்டுப்புலி, குளிப்புலி, யானைப்பந்தி, குதிரைப்பந்தி, ஒட் டகக்கூட்டம், பெட்டைமறைகள், மான், கடம்பை, கலைமான், வெளிமான், புள்ளிமான், காண்டாமிருகம், கரடி, கஸ்தூரிமிருக ம். கபிலைகள், காட்டுமேதி, கடாப்பன்றி, முட்பன்றி, முரட்டுக் கழுதை, கோவேறுகழுதை, சியம்போற்பாயும் செந்நாய், கருநா ய், ஓநாய், மாநாய், மரைநாய், வானநாய், மந்தி, குரங்கு, குள் ளநரி, குளிநரி, குண்டுநரி, முயலுடும்பு, காட்டுப்பூனை, கடுவன் பூனை, கரும்பூனை, புனுகுபூனை, ஜவ்வாதுபூனை, கீரிப்பிள்ளை, கிளிப்பிள்ளை, கழுகுபருந்து, காரண்டம், இன்னு மநேகவிதமான விலங்கினங்களும், பக்ஷிஜாதிகளும், சாட்சாத் ஈசுர ஆக்ஞையா லுண்டானதால், இப்பேர்ப்பட்ட மிருகாதிகளெல்லாம் வனத்தில் நின்றும் வலையிற் சிக்காமலும், ஆயுதங்கள் படாமலும், விடுபட் டு இராஜன் முதல் சகல சைன்யங்களுடைய கண்ணிற்பட்டும் படாததுமாத் தோன்றி, தெக்ஷணபாகமாயோடி வருவதைக் கண் டு, சுத்தவீரர்களும், வேடர்களும் சகல சன்னுகமாத் துடர்ந்து செ ல்லவே, இராஜனுங் கண்டு ஈதென்ன ஆச்சரியம் நாமநேக நோ மா பஜபல சுத்தவீரர்களாலும், பலவித பாணங்களினாலும், வே

ட்டையாடியதில், இயாதொரு பக்ஷி மிருகங்கள் கூட சேதமில்லாமல் ஓடிவதென்று பரிமேல் ஆயுதபாணியாய்ச் சினந்து நெடுமூச்செறிந்து நிற்கின்ற தருணத்தில், அரசனிற்கும் சமீபத்தில் ஓர் குகையிலிருந்து ஓர் கொடிய வேங்கை யொன்று யெழுந்து இராஜன் முன்னாலோடவே கண்ணுற்ற இராஜனும் பெஞ்சினமோங்கி ஓர் கடின பாணத்தை யெடுத்து அதின்மீது பிரயோகம் பண்ணவே, அப்பாணத்தை வேங்கையானது லக்ஷியம் பண்ணாமலும், இராஜன்கண்ணுக்குப் புலப்படும்படியாயும் தெக்ஷணபாகமா சமிவனக்ஷேத்திரத்தை நோக்கி யோடியது. இராஜன்பார்த்து ஆஹா இதுவென்ன மாயாவினோதமாயிருப்பதென்று வியந்தும், பராக்கிரம சுத்தவீரனாகையாற் சினந்தும், வேங்கைசெல்லும் வழியூடே அதிவேகமாய்ப் புரவியுடன்றுடர்ந்து இச்சமிவனக்ஷேத்திரம்வந்து வேங்கையின்கிட்டநெருங்கி வல்லயத்தாற் குத்த ஓங்கியவுடனே வேங்கையானது பயந்தாற்போல கருணாமூர்த்தியின் சந்நிதானத்திலிருக்கும்படியான சப்தரிஷி தீர்த்தமாகிய சீதளபுஷ்கரணியில் திடிலென்று பாய்ந்துமறைந்தது. அரசனுங்கண்டு திகிலிட்டு ஓகோ இஃதென்ன ஆச்சரியம். பூர்வம ஸ்ரீராகவனது தேவியாருக்காக மாரீசன் மாயமானாகவந்தாப்போலும், பாண்டுபுத்திராதிகள் ஆரண்யமடைந்தகாலத்தில் தருமக்கடவுளே மான்வடிவாகி, ரிஷியின் மறையைக்கவர்ந் தோடிய மரியைப்போலும், இன்னும் அரிச்சந்திரன் நளமகாராஜன் இவர்களுக்குமுன் அம்சம் கலைமான் வந்தாப்போலும், ஆகியதென்றும் மனங்கலங்கி இபாது விபரீதமோ அல்லது ஈசுவரன்றிருவிளையாடலோ யென்றகாரணமோ அறிகிலோமென்ற விசாரத்துடன், வனத்தில் ஓடிவந்த சிரமத்தினால், புரவியை விட்டிறங்கி தனக்குற்ற விடாசோபத்தை மாற்றிக்கொள்வோமென்ற யெண்ணத்துடன் நாவரக்ஷியேவிட்டமையால் வேங்கை பாய்ந்து மறைந்த தீர்த்ததடாகத்தில் இறங்கித் தீர்த்தபானம்பண்ண, மனது ஐயுற்றவனாக தீர்த்தத்திலோர்காலும் கரையிலோர்காலுமாக நின்று, இரண்டு கரங்களினாற் தீர்த்தத்தை யள்ளிப் பானம்பண்ணி விடாய்தீர்ந்து புரவிக்கும் ஜலமருத்தித்து ஓர் விருக்ஷத்தினிடம் குதிரையைக்கட்டி நீழலிற்போய் தானணிந்திருந்த ஆயுதங்களையெல்லாங் களைந்து நிற்பளவில், தனது தேகத்திலிருந்த ரோகமாகிய சருங்குஷ்டமானதில்

இத்தீர்த்தம் பட்ட ஓர்நால் இரண்டுகரங்களிலும் இருந்த கொடிய குஷ்டமானது நீங்கி முன் சுயவடிவமாய்க் கண்டு பேரானந்தக்கடலில் மூழ்கினவனுப் பரவச புளகாங்கிதங்கொண் டானந்தித்து, ஈசுரானுக்கிரக மிப்படியாகத்தா னிவடமுற்றதோ ஸ்ரீ துர்வாசமகாரிஷியானவர் புகன்ற திவ்ய சமிவன க்ஷேத்திரமானது இஃது தானோ வென்று மகான்மியபோவென்று சோபமாகித் தன்னை மறந்து அவ்வனப் பற்பூர விருக்ஷ கீழிற் சயனமாகினான். இவ்விதமாக இராஜனும் உறங்கி யுறங்காதிருக்கின்றசமயத்தில் இயாதொரு சாட்சாத் கருவேல்நாதராகிய சிவபெருமான் வேந்தனது சொற்பனத்தில் விருத்தப்பிராயனா ரூபத்துடன் விபூதி ருத்திராக்ஷகண்ட மாலிகாபரண மிலங்கும்படியாய்த்தோன்றி நின்று ஓவ பூபாலா இக்ஷேத்திரமே யுனக்குத் துர்வாசமுனிவரா லுரைக்கப்பட்ட சமிவனக்ஷேத்திரமென் றுணர்வாய் பூர்வம் பிரமலிங்கமாயுள்ளதைப் பின்பு வசிட்டரிஷியால் இவ்வாலயப் பிரதிஷ்டைசெய்தும், சந்திராதித்தாண் முதலிய ரிஷிகளும் பூசிக்கப்பட்டது. இஃது ஆலயம் க்ஷீணித்திருப்பதால் நீயும் அஃதை சீர்திருத்தி இத்தடாகத்தில் நான்கு தீர்த்தமுளது. அத்தீர்த்தத்திலும் படிந்து அவ்விசனைப் பூசிப்பாயாகி லுனது பூர்வ கன்மரோகமானது நிவாரணமாகுமென்று திருவாக்கருளி அந்தரத்யானமாகினார். உடனே அரசனுந் திடுக்கிட்டெழுந்து மெய்யியர்ப்படைந்து நிகை தெளிந்து, ஓகோ ஸ்ரீ துர்வாசமுனிவர் புகன்ற சமிவன க்ஷேத்திரத்தில், சாட்சாத் ஈசுரனே வேங்கை வடிவாய் வந்து நம்மைக் கூட்டிவந்து தடுத்தாட்கொண்டாரென்ற, உச்சாகமேலிட்டு, அலைகளையுடைய சாகரத்தாழ்ந்திக் கரை கண்டவனு ஆனந்த பரவசத்துடனிற்கின்ற தருணத்தில், தனது மந்திரி முதலாய சேனு சைன்யங்களும் மிருகங்களைத் துடர்ந்து வந்தவர்கள் இச்சமிவனத்தில் வந்தவுடன் இயாதொரு மிருகங்களையும் புலப்படாமல் இதென்ன காரணமென்றிளைப்புற்று, அரசனிருக்கின்ற தலம் வந்து சேர்ந்தார்கள். அரசனு மிவர்களைக் கண்டானந்தித்து, மந்திரி பிரதானிகளுடன் நடந்த விர்த்தாந்தங்களையெல்லாம் சவிஸ்தாரமாயுரைத்து, வந்த சேனுசதுரங்கங்களுடன் அக்ஷேத்திரத்தினிலே விடுதிகளமைத்து, தன்னகர் முதல மற்றச் சோழபூபதிகளுக்குந் தூதனுப்பிச் சர்வத்திரர்களையும் வரவழைத்து, அச்சமிவனேசரது

ஆக்ஞையின் பிரகாரம் அவ்வாலயப் பணிவிடைகளில் இயாதொரு குறையின்றி முடித்து, சர்வ உத்ஸவாதிகளுநடாத்தி, ஈசுர சந்நிதானத்திலிருக்குந் தீர்த்தத்திற்படிந்து கோவிலுள்த்தனது பத்தினியுடன் மற்றுமுண்டான இராஜாக்கள், மந்திரி, பிரதானிகளுடன் சென்று, சாட்சாத் கருவேனாதனது திவ்ய சந்நிதானத்தின் முன்னாகச் சோழபூபனாகிய கலிகாலச்சோழனானவன் தண்டாகாரமாய்க் கீழே வீழ்ந்தெழுந்து, களையிலா உவகைக் கடலாடினவனாக ஆனந்தநிர்த்தனமாடியும், பலவித ஸ்தோத்திரம் பாடியும், விழிகளிலிருந்தும் ஆனந்த பாஷ்பம் ஆறாய்ப் பெருக, எம்பெருமானைப் பணிந்தும், இரண்டு கரங்களையும் சிரசின்மேற் கூப்பிக்கொண்டு, ஹர ஹர சம்போ முதலீறிலாத முக்கட் சோதியே மனோவாக்குக் கதீதனே, சர்வலோக பூதகாரணனே, அகிலப் பிரபஞ்சங்களையும் பயந்தருளிய உமாதேவியை வாமபாகத்திலுடைய பெம்மானே, அடியார்கள் குற்றங்களைக் குணமாகக் கொண்டருள் பாலித்தருளும் கருணையங்கடலே, அன்பர் யெண்ணம்போ லளிக்குங் கற்பகத் தருவே, எனது கரிய குஷ்ட ரோகத்தை நிவர்த்தித்த கருவேலின் கீழமர்ந்த கருணாமுகூர்த்தமே என்று பலவாறு ஸ்தோத்திரம் பண்ணி நிற்கையில், பூபதியினுடையதேகமானது பொற்பிரகாசமாக சர்வத்திராளுடைய கண்களுக்குந்தோன்றி, யாவர்களுங் கண்டதிசயமடைந்து ஆஹா, ஈசுவரன் யிச்சமிவனத்தில், சாநித்தியமாவிளங்குவது நாமிதுவரையில் யாவராலுங் கேள்வியுற்றறிந்திலோமேயென்று, யாவர்களும் ஆனந்தபரவசமடைந்து சிவபிரானைமிகுந்த அன்போடுபணிந்தும் கலிகாலச்சோழபூபதியால்,கருவேலீசனுக்கும்அம்மைபிரகநாயகிக்கும் அநேகவிதமான ஆபரணாதிகளும், பீதாம்பரங்களும் ஆலயத்திற்காகிய பலவிதபாத்திராதிகளும் அநேகவாகனாதிகளும், இயாதொருகுறைவில்லாமல் நடாத்திவைத்தும், ஆதிசைவர்களையும்பூசித்துவரும்படி திட்டம்பண்ணி இச்சமியாகிய, வன்னிகாடு, கருவேற்காட்டையும், சேதனம்பண்ணி, ஓர்பெரிதாகியபட்டினமாக அநேகவருணத்தார்களுக்கும் தக்க அரண்மனைகளும் விசித்திரவீதிகளுமாயுண்டுபண்ணிவைத்து நவசோழகர்களும ஒன்றுகூடி ஆலோசித்து இந்நகரத்தை மகேந்திரசோழமகாராஜனால் ஆண்டுவரும்படியாயும் கருவேல்நிறம்பிய திட்டைச்சேதனம்பண்ணி, குடியேற்

வைத்தமையால் இந்நகர்க்குநாமம் கருந்திட்டைகுடியென்னும், கருந்தையம்பதியென்றும், நாமகரணமிட்டு, கலிகாலச்சோழபூபாலனும் சிலநாளிங்கு வாசமாயிருந்து தனது பத்தினியும் கற்பமுற்றுப்புத்திரனு மகாகோடி சூரியதேயசுடன்பிறந்து அக்குழந்தைக்கு, கருகூலச்சோழபூபதியெனுநாமகரணமிட்டுமற்றும்மந்திரிபிரதானி சேனைசையனங்களுடன் தன்னகரமடைந்துசுவரனேசனாக துர்வாசமகாரிஷியையும் சதாவாழ்த்திஇராச்சியபரிபாலினம் செய்துவந்தானென்று நைமிசவாசிகளாகிய சௌனகாதி மகாரிஷிகளுக்குத் திரிகாலமோர்ந்த சூதபுராணிகர்சொல்லியும்இச்சமிவனக்ஷேத்திரத்தை சுற்றிலும் மற்ற ரிஷிகளாற்பூஜிக்கப்பட்ட சப்தஸ்தலவாலாற்றையும், ஸ்ரீசிவபிரான்விளையாடலையும் சொல்லுவதானார்

கலிகாலச் சோழன் ரோகநிவாரணச்சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

பதிநான்காவது

# சப்தஸ்தலச்சருக்கம்.

கலிவிருத்தம்.

சந்தகிற்கருங் காலிகொன்றைபல
தாருசூழ்ந்திலகு நைமிசை
விந்தையாரணிய மேவுபுங்கவர்கள்
வேதகாவில்வளர் சூதனைச்
சிந்தைபொங்க வுபசார வந்தனைகள்
செய்துநின்றுசிவா சிவவென
அந்தானுவகை யோடிலங்குகதை
சொல்கவென்றரிய துதிசெய்வார்.

இப்படி ஸ்தோத்திரஞ்செய்து ஆனந்தக் கண்ணீர் ததும்பநின்று, சிவாபிரானுடைய கதாசாரத்தி லின்புற்று அன்புகந்து கேட்கும்படியான நைமிசவாசிகளாகிய சௌனகாதி மஹாரிஷிக

னை நோக்கி, பூதபௌஷிய வர்த்தமானங்களு மோர்ந்த, ஸ்ரீ வியாசபகவான் மாணாக்கராகிய சூதபுராணிகர் சமிவனேசர் கருணைகூர்ந்திலங்கும்படியாகிய சப்தஸ்தலங்களிலும் சப்தரிஷிகளாற் பூஜிக்கப்பட்ட தலத்தின் வரலாற்றைச் சொல்லத் தொடங்கினார்.

பூர்வம் பாற்கடலில் சர்வதேவதைகளும், அசுரரும் அமிர்தமதனம் செய்து வருங்காலத்தில் அதனிடம் உற்பவமானது தேவதைகளுக்கு ஜீவனார்த்தமாயிருக்கும்படியான அமுர்த முண்டானதை ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் ஜெகன்மோகினி அவதாரங்கொண்டு மற்றுந் தேவர்களுக்கெல்லா மீய்ந்து, அசுரர்களை வஞ்சித்து பாக்கியாயிருந்த அமுர்தத்தை ஓர் சுவர்னகடத்திற் பதனம்பண்ணி, மகபதியாகிய யிந்திரனிடங்கொடுத்து இஃதை அசுரரறியாமற் பதனம்பண்ணி வைத்துக்கொள் ளென்றபடி வச்சிரபாணியும் பெற்றுக்கொண்டு தனது பொன்னகரடைந்து மிருந்த காவல்களுடன் பதனம்பண்ணி வைத்திருக்கின்ற காலத்தில் இஃதுணர்ந்த அசுரரும் ஒகோ நம்மை விஷ்ணுவும் வஞ்சசம்பண்ணி இந்திரனிடமாக மறைத்துவைத்திருக்கின்ற அமுர்தத்தை நாம் யெவ்வாற்றாலேனும் கிரகித்துக்கொண்டு வருவோமென்றவர்களா அசுரர்கள் விண்ணோடேகி தேவர்களுடன் போர்புரிந்து பொன்னாட்டைச் சின்னபின்னப்படுத்துவதை தேவர்களெல்லாமறிந்து தேவராஜனாகிய மகபதிமுன் போய் அசுரர் நம் நகரத்தில் அமுதமிருப்பதறிந்து அசுரர் வந்து யுத்தம்பண்ணி தும்சப்படுத்துகிறார்களென்பதை மகபதிகேட்டு, சர்வ தேவர்களும் ஒருங்குகூடி, ஸ்ரீ சிவபெருமானைக் குறித்துத் தவம்பண்ணினார்கள். இயாதொரு சிவபெருமானு மிவர்களினுடைய அரிய தவத்துக் கிரங்கி, நேரிற் பரத்யக்ஷமாய் வெள்ளியங்கிரிபோலு மிலங்கிய ரிஷபவாகனத்தில் உமாசகிதராய் ஆரோணித்து வந்து, ஏ இந்திரா இயாதுகாரணமாக யெம்மைச்சிந்திப்பதுவென்றறியாதுபோல் திருவாக்கருளவே இந்திரனுங் கண்டு ஆனந்தபரவசமடைந்து புளகாங்கிதனாகி இன்பசாகரத்தாழ்ந்து, அசுரரால் துன்பகண்டோமென்று மநேகவிதமா ஸ்தோத்திரஞ்செய்து ஏ பரமதயாளுவே அரிய னறியா அகண்டசோதியே ஸ்ரீ விஷ்ணுவினால் அமுர்தத்தை யெமதிடமளித்து வைத்திருக்கும்படியாய்ச்செய்ததில் அசுரர் வினைவிளைந்தது அவ்விராக்ஷதருடைய இம்சையை இவடத்தால் மாற்றினாலன்றி

அசுரரால் யுத்தத்தினலாற்றோமென இறைஞ்சிநிற்கின்ற குலிசைபாணியை நோக்கி, அஞ்சேலென்று அவ்வமிர்தகடத்தை தனது திருக்கரத்திற்பற்றி இயாதொரு கருணாமூர்த்தியானவர் தேவர்களையுங் காப்பாற்றியாண்டபொருட்டால் ஸ்ரீ சிவபிரானும் அமிர்தகடேசராய் இச்சமிவன க்ஷேத்திரத்தில் பூர்வம் குபேரனாற் பிரதிஷ்டைசெய்து கஸ்யப மகாரிஷி பூசிக்கப்பட்டுமே, சுதேகம்பெற்ற வசிட்டமகாரிஷியும் அருந்ததியைப் புணர்விவாகம் முடித்த ஸ்தலத்தின் பக்கத்தில் பரத்துவாச மகாரிஷியாற் பூஜிக்கப்பட்ட அமிர்தகடேசரென்று விளங்கி வருகின்றது. அது நிற்க, அத்தலத்தின் பாங்கரில் அத்திரிமகாரிஷியால் ஸ்தாபிதம்செய்து பூசிக்கப்பட்ட கைலாசநாதரென்ற ஈஸ்வரன் வசிக்கும்படியான ஸ்தலமுமொன்றுளது. அது நிற்க, விஸ்வாமித்திர மகாரிஷியால் பூஜிக்கப்பட்டுள்ள பூர்வம் சத்தி க்ஷேத்திரமென்ற சந்திமகாரிஷியால் பூஜிக்கப்பட்ட விர்தநாந்தமும் கூறுவோம். பூர்வத்தில் திருவாலவாயென்ற கூடலம்பதியில், அரிமர்த்தனபாண்டியன் செங்கோனடாத்தியும் அப்பதிக்குப்பதியாய் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனை நடாத்துவனுவமாய் விளங்கும் இயாதொரு சாட்சாத் மீனாக்ஷிசுந்தரேஸ்பரன் மீது மிகுந்த பயபக்தி விசுவாசத்துடன் உலக விசாரணையிலும் இயாதொரு வழுவிலாது நடாத்தி, அரசுபுரிந்து வருநாளில் இச்சமிவனக்ஷேத்திரத்தின் பாங்கரிலுள்ள தஞ்சைமாநகரத்திலிருந்து செங்கோல் நடாத்தும்படியான மகேந்திரசோழமகாராஜன் சோழதேசத்தை யாளுநாளில், அவ்வரிமர்த்தனபாண்டியனுக்கும், இச்சோழபூபதிக்கும் யேதோ காரணம் பகை யுண்டாகினது. அக்காலையில் மகேந்திர சோழனுக்கு, இரதகஜ துரகபதாதிகள் அதிமிதமாக யிருப்பது பாண்டியனறிந்து, தனதரசில் மந்திரியாயிருக்கின்ற பிரமகுல சிரேஷ்டரான திருவாதவூரராகிய மாணிக்கவாசகரை வரவழைத்து நமதரசுக்கு சத்துருத்வமா சோழமகாராஜன் யெண்ணங்கொண்டிருப்ப துணர்ந்தோம். ஆகையால், நமக்கு சைன்யங்களும், துரகங்களுங் குறைவாகயிருப்பதால் பொக்கிஷத்தில் வேண்டிய திரவியங்களெடுத்து, பரிவாரங்களுடன் சென்று, புத்தத்திர்க்காதும்படியான உயர்வான சகல ஜில

ட்சணத்தோடுங் கூடிய புரவிகள் வாங்கிவருவீராகவென்று பாண்டியன் கட்டளையிட, அவ்வுத்திரவைப்பெற்ற மந்திரியாகிய மாணிக்கவாசகரும், திரவிய பொக்கிஷாவிற் சென்று, எழுபத்திரண்டுகோடி பசும்பொன்களுமெடுத்து, அதற்காக வேண்டிய பதாதிகளும் திட்டம்பண்ணி, அநேக பரிவாரங்களுடன் புரப்பட்டு உத்தரபாகமா நோக்கி யநேக நாடு காடுகளெல்லாங் கடந்து, ஆத்மநாதபுரமென்றோர் கிராமத்தின் பாங்கரில் அகப்பைச்சித்தர் தவம் பண்ணிக்கொண்டிருக்கின்ற குருந்தவனச் சார்படைந்து ஆங்கு கூடாரமடித்து, சர்வ பரிவாரங்களுடன் அவ்விரவிற் சகல பந்தோபஸ்துடன் திரவியத்தைப் பாதுகாத்து, வந்திருக்கின்ற சுயம்பாகிகளால் போஜன விஷயங்களுக்காகிய பாகங்கள் நடத்திக்கொண்டிருக்குந் தருணத்தில், ஸ்ரீ மாணிக்கவாசகரோ மகா சைவப் பயிராயுற்பனமாகியதுவே, யதுவாவந்த சிவபூஜை மறவாத சிரோன்மணியானவர் மாலைக்கடன் முதலாகிய, சந்தியா வனுட்டான சங்கற்பங்களு நடாத்தி நிற்குங்காலையில் அடுத்த சமீபத்தில் ஓர், குருந்த விருக்ஷத்தினருகாய், ஓர் சிவக்ஷேத்திரமானது, க்ஷீணித்திருப்பதுகண்டு ஆங்குசென்று, ஈசுவரனைச்சிந்தித்து நிட்டைகூடியிருந்து, சகல மானஸபூசைகளும்முடித்து, போஜனாதிகளுமுற்றியபின்னர், சிவத்தியானராய் சயனித்திருக்குந்தருணத்தில், சாட்சாத்சிவபிரான், விருத்தவேதியராய், விபூதியுத்தூளனதிருமேனிபிரகாசிக்க, ஸ்ரீபஞ்சாக்ஷரமே செபித்த நாவுடையவரும் தண்டூன்றி கூனுடனசைந்தாடிய மெய்யும், தொங்குகின்றகோவணமும், உருத்திராக்ஷமாலிகாபரணமும், தலைப்பணிப்பும், கிழிந்த வுத்தரியம் தோளிற்புரளும்படியான, கோலத்துடன், பிரத்யக்ஷமாகவே, மாணிக்கவாசகரது, சொற்பனத்திற்பிரகாசித்து நின்றுவ யெனதுபத்தசிகாமணியே யானிவ்வாரணியத்தின் குருந்த விருக்ஷத்தின்கண் வெயில், காற்று, மழை முதலாகிய இம்சையை சகிக்காத மேனியாய் இக்ஷீணமான வாலயத்துள் வசிக்கின்றேன் நீயுமித்தலத்தை நூதனமாய்க் கட்டியும் யெனதுபதேசத்தைப்பெற்று பூர்வம் விட்டகுறை முற்றி, யெமதுபதத்தையடைந்து சதா உனது நாமம் ஆச்சாந்தரார்க்கமாய் விளங்குவாயென்று சில இரகசியமான பொருளையுமுணர்த்தி அந்தரத்யானமடைந்தனர், உடனே யெழுந்திருந்து மெய்முழுதும் வியப்படைந்து, மயிர்க்கூச்ச

விட்டு, கண்ட சிவவடிவத்தை நினைந்து நினைந்து, ஆனந்தக்கண்ணீர் ததும்பி, தேம்பித்தேம்பி இரண்டு கண்களினாலும் ஆனந்தபாஷ்பம் ஆறாய்ப்பெருகவழுது, பூர்வம்நந்தனார்கொண்ட சிவாநந்தபிரமைபோல், பேரன்பாகிய சித்தமே பிரமைபோலாகிப் பாண்டியமகாராஜனளித்த கட்டளையையும் மறந்து வேறு சிந்தையும், மெஞ்ஞானபோதமுமேவிட்டு, பொழுதுதயமானவுடன் யெழுந்திருந்து பக்கத்திலுள்ள கிராமங்களில் காலாட்களை விடுத்து அவ்விடங்களிலுமிருக்கும் வேதியர்களை வரவழைத்தது. சிவபிரானுக் காலயமுடிக்கஆயமுகூர்த்தமிட்டு அநேகவிசித்திரமான சாஸ்திர வல்லவர்களாகியதேவசில்ப்பிகளைப்போலுள்ளமயன்களையும் அநேகவிதமான செளதை, கன்மியன்களையும்வரவழைத்துக், கொண்டுவந்த, திரவியங்களையெடுத்துச் செலவிட்டு யெவர்களுங்கண்டதிசயிக்கும்படியான, விசித்திரமான ஆலயமுங்கட்டிமிந்த திரவியத்தை சாட்சாத் ஆத்மநாதன், அம்மை, யோகாம்பிகையின் திருக்கோவிலுள் பொற்பீடத்தின்கீழ்ப்பரப்பி யதின்மீது, வெறுவெளிநிராலம்பமாகிய, சிவ இரகசிய சக்கரஸ்தாபனஞ்செய்து, கும்பாபிஷேகமுதலாகிய மண்டலாபிஷேகமுநடாத்திக்கொண் டிப்படியிருக்க, கூடலம்பதிக்கரசனாகிய அரிமர்த்தனபாண்டியனும், நமக்கு சைன்யங்களுடன் புரவிகள் வாங்கிவரச்சென்ற மந்திரியாகிய வாதவூரரை இன்னுமவரக்காணேமேயென்று மிகுந்த வியாகூலத்துடனிருக்கும் அரசனிடம், பலானபேர்களிவ்விதமாக மாணிக்கவாசகர் இன்னஸ்தலத்தில் ஈசுராலயம் கட்டிக்கொண்டிருக்கின்றாரென்ற சமாசாரங்களையறிந்தவனாக அரசனும் கடினமாகிய ஓர் தூதனைவிடுத்துப் பார்த்துவாவென்றனுப்பி அவனாலிதைந் தீர்க்கமாய் விசாரித்தும் பின்னுமிரண்டு தூதர்களைவிடுத்து வாதவூரரை அதிசீக்கிர மிங்குகொண்டுவாவென்றனுப்பியவுடனே தூதனும் விரைவிற்சென்றடிபணிந்து, சிவகளையோடு விளங்கிக்கொண்டிருக்கும்படியான மாணிக்கவாசகராகிய மந்திரியை இட்டுக்கொண்டுபோயரசன்முன்னில் விட்டுநின்றான். அரசனும், சைவதவவடிவமாய்நிற்கின்ற மந்திரியாகிய வாதவூரரைநோக்கி ஓகோ மந்திரியே! புவி தான் சைன்யத்துறைமென்று புரவிகள் கிடைப்ப

ண்ணிக்கொண்டுவரும்படி திரவியத்துடன் அனுப்பிய யெம்பிரா னைத்தப்பிஇதுவரையிலென்செய்தீரென்சினக்குறிப்புடன்கேட் டவே, வாதவூராராகிய மந்திரியுமிகுந்த அச்சத்தோடு, வெம்பெரு மானுடைய மெய்யன்புந் தயவாகிய சகாவைமுன்னிட்டவராய் அ ரசனைநோக்கி, ஓ பூபாலனாகிய பாண்டியமகாராஜனேகேட்பாயாக யானுந்திரவியத்துடன் உத்தரபாகமாய் நெடுந்துலைசென்று கா ஸ்மீரதேசம்புக்கி யாங்கு நமது சைன்யசன்னாகங்களுக்குத்தக்க பு ரவிகளமைத்து திரவியஞ்செலுத்தி வந்திருக்கின்றேன் இன்னும் ஒரு வாரத்திற்குள்ளிவடம் வந்துசேருமென்றும் அப்படிக்கு வரா தவரையில் சமுகத்தாலிட்ட ஆக்ஞைப் பிரகார மடைவேன் யெ ன்று சொல்லியும், இராஜனுடைய விடைபெற்றுக்கொண்டு ஸ்ரீமீ னாக்ஷி சுந்தரேசர் ஆலயத்துட்சென்று, திருவாசக ஸ்தோத்திரங் களியற்றியும் அரசனுக்கியம்பிய கெடுவாகுதேயென்ற வியாபகத் தை, சொற்பனாவஸ்தையிலுமெண்ணாது சுந்தரேசரது திருவடிக் கன்புருகினவராய், பரமானந்தநிட்டையிற், புலனொடு கரணங்க ளோய்ந்து நிற்பவராயினர். இப்படிக்கிதுநிற்க, இயாதொரு சோ மசுந்தரக் கடவுளானவர் பக்தனை வாதவூரார் அரசனுக்குரைத்த நாளாகுதே அரசனாலிம்சைநேரிடுமே, நம்பக்தனுக்கென்ற கவலை யுடையவரும், அன்பர்களுடைய துன்பத்தையெல்லாம் தாமேய டைந்து தடுத்தாட்கொள்பவருமாகியஎம்பெருமானானவர், மூலலி ங்கத்தினின்றும் விடுபட்டு அண்டமுகடளாவியநீண்டசிகரங்களையு டைய இமயமலையரசனுக்கும், அவன் பத்தினியாகிய மேனைக்கும் அருமைத் திருப்புதல்வியாரும் பாண்டிநாட்டி லவதரித்த வெம்பி ராட்டியாருமாகிய மீனாக்ஷியம்மையுடன் வினவி, நந்தி, பதஞ்சலி, வியாக்கிரபாதர் இன்னும் சர்வபிரமதகணங்களுடன் பிறப்பட்டு இ யாதொரு பரமபத்தராகிய, திருவாதவூரரை இரக்ஷிக்கும்பொருட் டாய் சாட்சாத் மீனாக்ஷி சுந்தரேசர், மற்றுங்கணநாதர்களை நோக்கி நீங்கள் யாவரும் குதிரை ஸாவகாரியாகிய இரவுத்துப்பட்டாணி வேடப்பலிப்பாகி வாருங்களென வுத்திரவாக்ஞாபித்து, தானும் ஓர் அதிபால்ய பராக்கிரம வீரம்பொருந்திய இரவுத்துப்பட்டாணி யாய். திடமான். அங்கி, கிசா தலைப்பாகுடன், கைவளை, தோள்

வளை, கட்டிகேடயம், தங்கக்கயிச்சு முதலிய, அநேகவித ஆயுதங்களையுமணிந்துகொண்டு, சதுர்வேதங்களையுமோர் குதிரையாக்கியதிலேறிக்கொண்டு சர்வத்திர கணநோஷ்டிகளாகிய இராவுத்தர்களுந் தன்னைச்சூழ, திருக்கூடலம்பதியைவிட்டு யித்தஞ்சையமாகரைச்சார்ந்த சமிவனக்ஷேத்திரத்தின் பாங்கரில்நான்கு குரோசத்துள்ளிலங்கும்படியான கூடலாரண்யத்தில் வந்திறங்கி குடாரமடித்து, அதன் சமீபத்திலுள்ள, சப்புகுமாரண்யத்தில் வசிக்கும்படியான, ஓரிகளையெல்லாம் வரவழைத்து, மிகவும் உயர்வாகிய, புரவிகளாய், குளம்பு லக்ஷணம், குத்துக்கால் லக்ஷணம், உரோம லக்ஷணம், காலிரண்டு சுழி, கன்னத்தின் முச்சுழி, முதுகில் மூதண்டசுழி, முன்னெத்தியோர் சுழி, மார்பிலிருச்சுழி, வயிற்றில் நான்குசுழி, மூதண்டச்சுழி, முக்கோணச்சுழி, கோதண்டரேகை, குமரரேகை, மதாளிரேகை, மவுனரேகை, கோசரரேகை, கும்பரேகை, கமலரேகை, கனிகைரேகை, கங்கணரேகை, இப்படிக்கு இலக்ஷணத்தோடுங்கூடிய தாவன, குஞ்சர-மயூர, விசித்திர கெதிகளோடு, வெள்ளை, கறுப்பு, சிவப்பு, நீலம், ஊதாப், பச்சை, மதுவர்ணம், மேகவர்ணம், மரகதவர்ணம், இரத்தவர்ணம், காயாம்பூவர்ணம், மாதளம்பூவர்ணம், காக்கணம்பூவர்ணம், கரிவர்ணம், புகைவர்ணம், பஞ்சவர்ணம், பசலைப்பழவர்ணம், இன்னும் அநேக வர்ணங்களுடைய புரவிகளாய்ச் சிருஷ்டித்து ஸாவகாரிகளாய்விளங்கும், இராவுத்தர்களாகிய பிரமத கணங்களை நோக்கி இப்புரவிகளை தயார்ப்பண்ணுங்களென்றுக்ஞாபிக்க உடனே யப்பரிகளைத் தட்டித்தேய்த்து வான்மயிர் கத்தரித்துச் சிகைகெடுத்து செம்பஞ்சூட்டி, மசாலைகள் மேய்த்து, இவ்துகள் கூடிய திராவகங்களைப் போட்டி, சிங்காரித்து புரவிகளுமானித்து கடினவேகத்துடன் தாண்டல், துள்ளல், வெறித்தல், கனைத்தலோடும் நிற்கின்ற புரவிகளை ஒருங்குசேர்த்து நிற்கின்ற தருணத்தில், பிரமலோகத்திலிருந்து பூமகளாகிய வேதன் வாணி சகிதரா அன்னவாகனத்திலேறி வந்திறங்கி பிரமதகணமாகிய, ஸாவசாரிகளுக்கெல்லாம் அன்னமிட்டு, எஜமான் ஸாவகாரியாய் விளங்கிய பாலசந்திரனை வேணியிற்றரித்த சுந்தரேசனை வணங்கி ஸ்தோத்திரம் பண்ணி, நாமகளுடன் அன்னப்பன் யென்ற நாமகரணமும் பெற்று பிரமலோகமடைந்த பின்னர் சிவகணமாகிய ஸாவுகாரிகளும், புரவிகளையெல்

யாய், கலகமும் பண்ணி இன்னுங்கின்னதென்று திட்டம் பார்த்து அப்புரவிகளின்மேலேறி கூடலாரணியங் கடந்து, சமீவனக்ஷேத்திரத்தருகிலிலங்கும்படியான புன்னாகவனத்தினூடே புரவிகளிற் சாரி செய்து வருகின்ற தருணத்தில், புன்னாகமென்னும் புன்னைமலர்கள் அலர்ந்து கமளீகரிக்க இளந்தென்றல்வீச மகாசோபிதமானவனத்தில் இயாதொருசாட்சாத்சுந்தரேசர் நேரிலுள்ளபுன்னைமலர்களைப் பரிமிதிருந்தபடியே பரித்து, மாலையாய்த்தொடுத்து பின்னால் வருகின்ற நந்தியாகிய லாவகாரியின்றோளிற்போட்டு, எம்பெருமானுக்கு நந்திரிதி சந்தோஷமுண்டாகி, பூமாலை இராவுத்தாவனைக்கு நாமாலை சாற்றினேனென்று செப்பியதுடன் திருவாய்மலர்ந்தருளி யவ்வனத்திலிருந்து யதிகாலையிற் பிறப்பட்டு, தன்னைத்தானுவிற்றிருக்கின்ற திருவாலவாயெனுங் கூடலம்பதிக்கெழுந்தனர், இப்படிக்கிருக்க அநந்தரத்தரசனாகிய அரிமர்த்தன பாண்டியனும் வாதவூராகிய மாணிக்கவாசகருரைத்த கெடுவின்றோடானதே, கொண்டுவா மந்திரியையென்று, வெயிலில்நிறுத்தி யநேக நிர்பந்தம் பண்ணுந்தருணத்தில், அடியாரை யாதரிக்கின்ற கிருபாமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுளும், அநேகவிதமானதேவவாத்தியங் கண்முழங்க, புரவிகள் வரும வேகத்தினால் தூசுகளெழும்பிச் செவ்வானம்போற்படர்ந்து பேரிகை முழக்கம் அண்டங்கள் வெடித்தாற்போற் குமுறலும், இஃதுணர்ந்தரசன் ஆறொ சோழபூபதியானவன் படையெடுத்து வருகின்றானோவென்று திகிலிட்டு, வேவுத்தாரர்களை விட்டுப்பார்க்கும்படி செய்தனன் தூதர்களுமோடிவந்து மாராஜா இதோ மாணிக்கவாசகர் சொல்லியபடி யநேக பட்டாணிகளுடன் புரவிகள் வருவதை நிகரிட்டுச் சொல்லத்தக்கதல்லவென்று சொல்ல, செவியுற்றரசனும் மந்திரி பிரதானிகளுடன் உப்பரிகையின் மேலேறிப்பார்ப்பளவில், குதிரைகள் வருவதைக்கண்டு ஆகோ யாம் வாதவூரானை கேட்டு சமாசாரத்தால் வீணே அபசாரம் பண்ணினோமென்று துக்கித்து மனம் வெட்கமடைந்தவனாக மாணிக்கவாசகரின் காவலை நீக்கி யாவருமிருக்குந்தருணத்தில், வெகுவித விநோதங்களாகிய பரிகளுடன். ஆசாரவாசலிற் லாயக்காரர்களும் வந்து இராஜனை மதியாதவர்களாய், ஓ இராஜனே மாணிக்கவாசகரால் கொடுத்து வந்த திரவியத்திற்கு யிதோ தூகங்கள் கொண்டு வந்திருக்கின்றோம். அதுகளை யொப்புக்கொண்டு உத்தி

ரது கொடுமென்று யெங்கவெஜமான் சொற்கடவா துரைத்தோய சீக்கிரம் வா வென்று சொல்லவே அரசனு சகலமந்திரி பிரதானிகளுடன் ஆசாரத்தில் வந்து பார்க்கவே, புரவிகளுடைய இலக்ஷணத்தையும், நிற்கின்ற ஸாவகாரிகளுடைய ரூபத்தையும், இவர்கட் கெஜமானாகிய வேதக்குதிரை யிலிலங்கும்படியான சுந்தரரான ஸாவகாரியையும் கண்ணுற்று திடுக்கிட்டு ஆஹா நாம் கொடுத்தனுப்பிய திரவியம் ஓர் குதிரைக்கு கிரையம் காணமாட்டாதே இப்பேர்ப்பட்ட புரவிகளை யெங்கே பார்த்து மாணிக்கவாசகர் திட்டம் பண்ணினாரோ வென்று மிகுந்த சந்தோஷமடைந்து ஸாவாகாரிக்கு வெகுமதி யளிக்க எண்ணங்கொண்டவனாக அரசன் அநேக விலையுயர்ந்த வஸ்துகள் மிகுந்த ஆபரணாதிகள் உயர்ந்த துப்பட்டாக்கள், சாதுராப் போர்வை முதலாகியவைகளைக் கொண்டுவரும்படிசெய்து, இராஜனானவன் எஜமானாகிய ஸாவாகாரியிடம் அச்சத்துடன் சென்று, மிகுந்த மரியாதையுடன் இவ்வாடையாபரணங்களை இரண்டு கரங்களினாற் றாங்கிக் கொடுக்கவே, சர்வ அண்ட புவனங்களையும் ஆண்டு அளிக்கும்படியாகிய நிர்தயாளரான ஸாவகாரியும் பார்த்து, இராஜனையும் அவனது வெகுமதியையும் லக்ஷியப்படுத்தாமல் தமது திருக்கரத்திற்பிரகாசிக்கின்ற சுவர்ணகம்பியினாலேந்தி, பக்கத்தில் நிற்கும் ஓர் புரவியின்மீது போட்டு நிற்கவே, அரசனும் மனம் வெகுண்டவனாய் சினக்குறிப்புற்றதைப் பக்கத்தில் நின்ற மந்திரி முதலானவர்களு மறிந்து, ஓ மகாராஜனே! அப்படிக்குச் செய்வது அவர்கள் தேச வழக்கமாயிருக்கும். அதுவுமன்றியில், அவர்களோ மிக்க பராக்கிரமமுடைய முரட்டுப் பட்டாணிகள். ஆனதால், நம்முடைய சினம் அவரிடஞ் செல்லாது இப்படி நினைப்பது காரியமல்லவென்று பலவாறெடுத்துரைத்து அரசனும் சரியென்றெண்ணி, குதிரைகளைப் பார்த்துப்பார்த்து, ஆஹா இப்புரவிகளைப்போற் கண்டதில்லையென்று கண்கள்கொள்ளாத ஆனந்தமடைந்து நிற்க, மற்றும சிவகணங்களாகிய ஸாவகாரிகளும் அரசனை நோக்கி, ஏ பூபதி உமது மந்திரியாகிய மாணிக்கவாசகராற் கொடுத்தனுப்பிய திரவியத்திற்காகிய குதிரைகள் கொண்டுவந்து சேர்ப்பித்தோம் ஒப்புக்கொள்வீரென, அரசனவர்களும்ஏறிய புரவிகளுடன் சென்று திருக்கோவிலுட்புகுந்து, [illegible]

ஈர் மூலலிங்கத்தில் ஐயிக்கியமானார். இது நிற்க. அரசனும் புர விகளுடைய சுழிசுத்தம் சேகை கண் முதலிய சர்வ இலக்ஷணங்க ளையும் தமது லாயத்திலுள்ள ஸாவகாரிகளாற் பார்க்கும்படி செய் து, அவர்களும் பார்த்து வேந்தனை நோக்கி, எ மைபால் இப்படி ப்பட்ட அஸ்வங்களை யாங்க ளிதுவரையிலும் பார்த்தறியோம், இ வைகள் பூலோகத்தின் புரவிகளே யல்ல, தேவதா புரவிகளை யா ங்கள் கண்டதுமில்லை. ஆகையாலிவைகளை உவமித்துச் சொல்லுத ற்கு யெங்கள் சிற்றறிவிற் கெட்டாது. ஆகையா லிது மகாரா ஜா பூஜாபலத்தினாற் கிடைத்ததன்றி வேறல்லவென்று கூறினார். இது கேட்டுக் கூடற்பதிக்கோமானும் ஆனந்தமடைந்து திருவாத வூரரை மெச்சி யாம் பண்ணின அபசாரங்களை மன்னிக்கவேண்டு மென்று மாணிக்கவாசகரது திருக்கரங்களை கண்களிலொற்றி ஆன ந்தபரவசமடைந்து, புரவிகளையெல்லாம் நமது அஸ்வலாயங்களி ற் சேற்பித்து, தக்க வுயர்வாகிய தீனிகளெல்லாம் மேய்த்துத் தே ய்த்துத் தயார்பண்ணுங்களெனத் தனது ஸாவகாரிகளுக்குக் கட்டளையி ட்டு வேந்தனும் அரண்மனை புக்கியபின்னர், அன்றிரவு வந்தவு டனே லாயங்களிற் சென்ற சிவபிரான் றிருவிளையாட்டாலுண்டா கிய துரகங்கள் யாவும் புராதனமாகிய வடிவமுடையநரிகளாகி அ ந்த லாயத்திலுள்ள முன்னிருந்த புரவிகளையெல்லாம் உடலைப்பிறி இரத்தமாமிஷாதிகளையெல்லாம் பக்ஷித்தும், லாயமுழுதிலும் சிதற ச்செய்தும், சன்னற் சாளரங்களினூட் புகுந்து வெளியிற்ப் பட்டினங்களிற் பிரவேசித்து, வீதிகள், மூலைகள், சந்துகள், பொந்துகள், ஆசார வாசல்க ளிப்படிப்பட்ட ஸ்தானங்களி னின்றும், தாங்கள் யெந்த நாளுமுண்டறியாத தீனிகள் அ ருந்திய உச்சாகத்தினாலும் ஊளையிட்டளறிய தெப்படியெனி ல், திரைகளைக் கொழிக்குஞ் சமுத்திரத்தினது சப்தம்போலும், சப்த மேகங்க ளொன்றாய்க்கூடி கெற்சித்தாற்போலும், ஸ்ரீ செ க்கபிரான் றிரு சந்நிதானத்தில் அந்தணர்கள் வேதகோஷம் போலும், இன்னும் சாதாரண வித்துவான்களிடம் நன்கு வச னிக்க வறியாமற் றன்னைப் புகழ்ந்து காணமற் கத்திய மகா வித்வான்களைப்போலும் ஊளையிட் டளறியதில் நகரத்திலுள் ள பிரஜைகள் யாவும் விழித்தெழுந்து, ஈதென்ன விபரீதம எங்கே பார்த்தாலும் நரிக் கூக்குரற் கடலொலி யென்று

அவ்வவர்களும் ஆயுதங்களை யெடுத்து சினத்துடனடிக்கப் பிறப்படக் கண்ட சம்புக் கூட்டங்கள் யெப்படிக் கேகியதென்றால், ஈயாத லோபர்கள் கவிஞரைக்கண் டோடிப் பதுங்குவது போலும் பதுங்கி, யாவர்களின் ஆயுதத்திற் படாதொதுங்கி, வனங்களை நோக்கி யோடியதுகண்ட யாவர்களும் அரசனிடம்போய் முறையிட்டு, இப்போது வந்த பரிகள் யாவும் முன்னிருந்த அஸ்வங்களையும் லாயத்துட் சேதம்பண்ணி, நரிக் கூட்டங்களா யோடியதென்று வினவ, இராஜனுங்கேட்டு மனங்கலங்கி, ஆஹா ஈதென்ன விபரீதமென்று மந்திரி பிரதானிகளுடன் கூடி யோசித்து, இஃது அதிசயங்களை நமதுநகராளுகின்ற நங்குலக்கடவுளாகிய மீனாக்ஷி சுந்தரேசரா லறிவோமென்று யாவர்களுக்கு முத்திரவளித்து, இராஜனும் சயனமாகினான். அப்படி நித்திரை செய்கின்ற இராஜனிடத்தில் சாட்சாத் சோமசுந்தரக் கடவுளானவர் இராஜன் சொற்பனத்தில் விருத்தவேதியராய் சிவவேடத்துடன், ஏ பூபாலனாகிய அரிமர்த்தனபாண்டியனே கேட்பாயாக, எனதன்பனாகிய திருவாதவூரனெனும் மாணிக்கவாசகரின் பொருட்டால் பக்தன் னுனக்குரைத்தவாக்குத் தவறாமல் யாம் சோழதேசத்திற் சென்று நமது சமிவனக்ஷேத்திரம பாங்கரின் ஆரண்யத்திலுள்ள நரிகளையெல்லாம் பரியாகவமைத்து அன்பன் றுயரை தீர்த்தாட்கொண்டோம் மென்று தீனதயாளாகிய சிவபெருமான் றிருவாக்களித்து அந்தரத்யானமாகினார். இப்படிச் சொற்பனங்கண்ட அரசனும் விழித்தெழுந்து மெய்நடுங்கி, கண்கலங்கி, ஒளிமயங்கித் தேகமெலாம் வியற்படைந்து யெழுந்துநின்று சிவபிரானாகிய சோமசுந்தரக்கடவுளை உள்ளத்தின்கண்ணே தியானித்து யான் செய்த அபசாரங்களையெலாம் மன்னிக்கவேண்டும் எம்பெருமானேயென்று ஆனந்தக்கண்ணீர் ததும்பி சரேலென்று வெளியில்வந்து, ஸ்ரீசோமசுந்தரக் கடவுளின் சந்நிதானமடைந்து தண்டாகாரமாய்க் கீழேவிழுந்து எழுந்துநின்று, ஹரஹர சம்போ, கங்காதரா, கௌரிவல்லவா, தீனதயாளுவே, திரிநேத்திரா, திகம்பரா, கங்காள பிக்ஷாண்டா, கயிலையங்கிரிவாசா, நிர்மலசொருபா, நீதவேதாந்தா, அம்பிகைபாகா, அகிலப்பிரபஞ்சா, ஆதிமார்த்தாண்டா, அடிமையினுடைய வம்சபாரம்பரையாயடிமைகொண்டருளிய யெம்பிராட்டியாராகிய மீனம்பாள் பாகத்தமர்ந்த மீனாக்ஷி சுந்தரேசனே யென்று பக

றிறைஞ்சிநிற்கவே; இப்பொழுதொரு சிவபெருமான் அசரீரியாய் பூபாலா அஞ்சேலென்று திருவாக்கருளியது கேட்டுண் மகிழ்வடைந்து, தன்னரண்மனைபுக்கி, மாணிக்கவாசகரது மெய்யன்பை வியந்து ஸ்தோத்திரம்பண்ணி, சிவபிரான் விளையாடலைப் புகன்றிருந்தனன். இதுநிற்க, அப்படிப்பட்ட மீனாக்ஷிசுந்தரக்கடவுளையுடைய சோழநாடாகிய சமிவனக்ஷேத்திரம் பாஸ்கரின் கூட லாரண்யம் வந்திறங்கிய ஸ்தானத்தில் ஸ்ரீ கௌதம மகாரிஷியாற் பூசிக்கப்பட்ட மீனாக்ஷிசுந்தரேசர் தலமொன்றுளது நரிகளைப்பிடித்தசம்புருபாரண்யமானது நரிபூமியெனவும், வாணியாற் கணங்களுக் கன்னமிட்ட ஸ்தலமானது அன்னப்பன்பேட்டை யெனவும், பரிகளையும், கணங்களையும் கணிதம்பண்ணின ஸ்தலமானது திட்டையெனவும், ஈசனின்றிலங்கிய தானத்தில் சத்திமகாரிஷியால் பூசிக்கப்பட்டும், விசுவாமித்திர க்ஷேத்திரத்திற் கிசான்யபாகத்தில் பூர்வம் மணிமுத்தநதி தீர்த்தத்திற்கும் பக்கத்தில் ஜெமதக்கினி மகாரிஷியாற் பூசிக்கப்பட்ட தலமொன்றுளது அத்தலத்தில் சேஷசயனாகிய விஷ்ணுவும், சுப்பிரமணியக்கடவுளும், ரிசிகமரிஷி புத்திராகிய பார்க்கவமகாரிஷியும் பூசிக்கப்பட்டன. பரிமேலெழுந்தருளிய பெம்மானுல் நந்திக்கு புன்னைமாலை சூடிய தலத்தில் ஈசனே தாடியோடு பட்டாணியாய் நின்றபடியால்" அத்தலம் புமாலை இரவுக்கென்றும், அத்தலத்தில் விசுவாமித்திரமகாரிஷியாற் பூசிக்கப்பட்டன. பூர்வம் சமிவனக்ஷேத்திரத்தில் ஸ்ரீ வசிட்டரா ற பிரதிஷ்டை நடாத்தியும், கற்பிலுயர்ந்த அருந்ததியையும் புனர்விவாகம் முடித்து மற்றும் சப்தரிஷிகளால் அவ்வாலயத்துள்ளாப்சப்தலிங்கங்களும் ஸ்தாபனம்செய்து, அவர்கள்பூசிக்கும்படியான ஆலயத்துள் தெக்ஷணாமூர்த்தியின் பக்கத்தில் ஸ்ரீ வசிட்டமகாரிஷியும், தர்மிஷ்டையும் தமது பஞ்சாக்ஷரம் சித்தியாகும்படி தவஞ்செய்துகொண்டிருக்க இத் தஞ்சைமாநகரை யாண்டுகொண்டிருக்கின்ற மகேந்திர சோழமகாராஜன் அரசுபுரியுங்காலத்தில் ஓர்நாளிராஜனும் சயனித்திருக்கின்றகாலத்தில், ஸ்ரீ சிவபெருமான் அரசனது சொற்பனத்திற் றோன்றி, வேந்தனே யுனது நகரத்தின் பக்கத்தில் எமது சடாபாரத்தினின் றிழிந்த கங்கையானது பிரவாகமாய் இறங்கிய தடாகத்திலோர் அபூர்வலிங்க மிருப்பது. அதற்கு ஓர் ஆலயமுண்டாக்கி அதை பூஜைபண்ணிப் பிரதிஷ்

டையும செய்யப்பட்டது. அத்தலமிப்போது சுரிமரித்திருப்ப தால நீயும், அதற்காகிய ஆலயமுடித்துப் பிரதிஷ்டை நடாத்து வா யென்ற, திருவாக்கருளியவுடனே இராஜனும் விழித்தெழுந் து மந்திரிபிரதானிகளுடன் ஆங்கு சென்று பார்க்கவே, சொற் பனத்திற்கூறியவாறே, ஓர் சிவலிங்கத்தின்மீது, கங்கை யொழு கியபடியே கண்டு, இராஜனு மகா ஆனந்தபரவசமடைந்து மகா சாஸ்திரபண்டிதர்களாகிய சிற்பிகளேயும், வரவழைத்து பிர மாண்டமான ஆலயமுடித்து, அம்மைபிரகநாயகியுடன் லிங்கப பிரதிஷ்டையு நடாத்தி சர்வ வர்ச்சவங்களும் செய்து, ஸ்ரீ கொங் கணசித்தரால் பூசிக்கப்பட்ட ஈசுராலயத்திற்கும், சர்வ உற்சவா திகளு நடாத்தி ஸ்ரீ தேவல மகாரிஷியாற் பூசிக்கப்பட்ட சங்கர நாராயணமூர்த்திக்கும் ஆலயமுடிந்து உற்சவாதிகளும் நடாத் தியபின்னர் ஸ்ரீ வசிஷ்டமகாரிஷியாலும் பின்பு கலிகாலசசோ ழமகாராஜனாலும் பிரதிஷ்டைசெய்த சமிவன க்ஷேத்திரத்தில ஸ்ரீ கருவேலுதசுவாமிக்கும் உர்சவம் ஆரம்பிக்கக்கருதி, மாத வமாதமெனும் வைகாசிமாசத்தில் பிரம நட்சேத்திரமான உ ரோகணி நட்சேத்திரத்தில் பூர்வம் வசிட்டமகாரிஷியால் ஏற்ப பட்டவிதிபோல் ஸ்ரீ வசிட்டமகாரிஷிக்கும் அருந்ததிக்கும் கஸ் யபக்ஷேத்திரத்தில் முகூர்த்தம நடாத்தி சிவிகையிலேற்றிவித்து சகல வாசசியங்கண்முழங்க சமிவனக்ஷேத்திரம் வந்து அந்த மாதத்தில் புனர்பூசநட்சேத்தில் துசாரோணமுதலிய பத்து நாள் உற்சவங்களையும் குறைவின்றிநடாத்தி சப்தஸ்தல உர்ச சவமெனு மகோர்சசவங்களையு நடத்த எத்தனித்து ஸ்ரீ சோ மாஸ்கந்தமூர்த்திக்கு அபிஷேகவலங்கார வர்ச்சனைதிகளும் செய் வித்து மகாவினோத விசித்திரமான சிவிகையின்பேரில எழுந்த ருளுவித்து சர்வ வாத்தியகோஷடங்கள் சப்திக்க அந்தணர்கு ழாங்கள் வேதகோஷடங்கண்முழங்க சாமரையிரட்ட ஆலவட் டம் மகரதோரணங்களிலங்க சப்தஸ்தலமாகிய முன்னமே கஸ் யப மகாரிஷியாற் பூசிக்கப்பட்ட குபேரன் பிரதிஷ்டை நடாத்தி ய அழகிஸ்வரர், தலமும் அதன் பாங்கரில் அத்திரிமகாரிஷியாற் பூசிக்கப்பட்ட கைலாசநாதருடைய ஸ்தலமும் காவிரிநதியின் பக்கத்திலும், பரத்துவாச மகாரிஷியாற் பூசிக்கப்பட்ட அமுர்த கடேசராய் விளங்கிய ஸ்தலமும், அதின் நான்கு குரோசத்து ள்ளாகிய சத்திமகாரிஷியாற் பூசிக்கப்பட்டுள்ள, மீனாட்சிசுந் தரேசர் கணகோஷடயங்களுடன் ஓரிப்பரிகளைத் திட்டம்பார்த்த தலமாகிய வசிட்டேசர் தலமும் அதற்காகக்கினிபாகமாய் விளங்கி கிய சோமசுந்தரமூர்த்தியானவர், திருக்கூடல்போ லெண்ணி யிஞ்சுசீசுந்தரேசர் குடாரமடித்து வசித்திருந்துள்ள கொதப

